# இப்படி கூல்டிரீங்க் குடித்தால் எப்படி கட்டுப்படி ஆகும்?




**எல்லாம் உள்பட ஒரு கிளாசுக்கு**
**0-30 பைசாவில் சுவைமிகு வின்-ஃபன்**
**நீங்கள் சுலபமாகத் தயாரிக்கலாம்!**

வெயில் வருட்டும் போது கூல் டிரிங்க் அதிகம் செலவாகத்தானே ஆகிறது...! ஆனால் செலவு அதிகம் வைக்காத வின் -ஃபன் குளிர் பான மிக்ஸ் இதோ. பவுடரும், சிரப்புமாக நன்கு பாக் செய்யப்பட்டு வரும் வின்-ஃபன். 'கூடாது' என்று சொல்ல மனம் வராத உங்களைப் போன்ற குடும்பத் தலைவிகளுக்கு.

- ஒரு பாக்கெட் வின்-ஃபன் 25க்கும் மேற்பட்ட கிளாசுகள் வழங்குகிறது.
- 5 தாகம் தீர்க்கும் சுவைகள் : ஆரஞ்சு, லெமன், ஸ்ட்ராபெர்ரி, பைன் ஆப்பிள், கோலா.
- தண்ணீரும், சர்க்கரையும் கலந்து நிமிடங்களில் தயாரிக்கலாம்... எவருக்குமே சுலபமானது.
- சர்க்கரை அதிகம் இழுக்காது.

**எத்தனை முறை வேண்டுமானாலும் குடிக்கக் கூடிய**
**வின்-ஃபன்னை ஒரு முறை குடித்துப் பாருங்கள்.**

தென்னிந்திய விநியோகஸ்தர்கள் :
சேஷாத்ரி அசோஸியேட்ஸ்
P. O. Box No. 4976
சென்னை 600 017.

# Vin-Fun
Soft Drink Concentrate
-the best drink under the sun !

# நுழைவுத் தேர்வு தேவைதானா?

(பொறியியல், மருத்துவ விவசாயக் கல்லூரிகளில் சேர்வதற்கு அரசு நுழைவுத்தேர்வு கொண்டுவந்துள்ளது. எதிர்க்கட்சிகள் பல இதைக் கண்டித்துள்ளன. இந்த நுழைவுத் தேர்வு முறைபற்றி இளைய தலைமுறையைச் சேர்ந்த சிலர் கருத்துக் கூறுகின்றனர்.)



○ ஆர் ரமேஷ்

**ஆர். ரமேஷ்:**

கிராமப் பகுதிகளிலிருந்து வருபவர்களுக்கு நுழைவுத் தேர்வில் தேறுவது சற்றுக் கடினம் தான். காரணம்: நகரங்களில் படிக்கும் மாணவர்கள் கிராமங்களில் படிக்கும் மாணவர்களைவிட சிறந்த பொது அறிவு பெற்றிருக்கிறார்கள். மேலும் பள்ளியிறுதி வகுப்பு (+2) தேர்ந்த ஒரு மாதத்திற்குள் மீண்டும் இப்படியொரு பரீட்சை எனில் இது ஒரு சுமை மட்டுமல்ல; இறுதித் தேர்வில் பாஸ் செய்ததையே மதிக்காதது போலல்லவா இருக்கிறது.

○ எஸ். செல்வராஜ்



**எஸ். ஆர். ஜி. பதி:**

நேர்க் காணல் (Interview) முறையில், மாணவர்களுடைய குடும்ப சூழ்நிலை, அவர்களது உடலமைப்பு, விளையாட்டுத் தகுதிகள் போன்றவற்றைத் தெரிந்து கொள்ள வசதி. நுழைவுத் தேர்வில் புத்தகப் புழுவாக இருப்பவர் மட்டும் தான் மிகச் சுலபமாகத் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். மேலும் இந்தத் தேர்வில் தேறுவதற்குப் பயிற்சி கொடுக்கத் தனியார் நிறுவனங்கள் 300, 400 என்று பணம் வாங்கிக் கொண்டு சொல்லிக்



○ எஸ். ஆர். ஜி. பதி

கொடுக்கப் போகின்றன. ஏழைமையின் காரணமாக இதுபோன்ற வசதிகளைப் பலர் பெற முடியாது.

**எஸ். செல்வராஜ்:**

நேர்க்காணல் முறையில் ஊழல் செய்கிறார்கள்என்று எதிர்க்கட்சியினர் சொல்லியதால் தான் முதல்வர் அவர்கள் இந்த நுழைவுத் தேர்வைக் கொண்டு வந்திருக்கிறார். பின் தங்கிய வகுப்பினருக்கான ஒதுக்கீடு குறைக்கப்படவில்லை. ஏற்கெனவே இருக்கும் சலுகைகளின் மூலம், பின் தங்கிய வகுப்பினரிலும் வசதிமிக்க மக்களே மீண்டும் மீண்டும் பயன் பெறுகிறார்கள். இதை தவிர்த்து பின் தங்கிய வகுப்பினரிலேயே ஏழைகளான ஆனால் சாமர்த்தியசாலிகளான மாணவர்களை முன்னேறச் செய்வதற்குத்தான் நுழைவுத் தேர்வினை முதல்வர் ஏற்பாடு செய்திருக்கிறார். பாராட்டப்பட வேண்டிய ஒன்று.

**லதா:**

நேர்காணல் முறையில் ஊழல்என்றால் நுழைவுத் தேர்வில் மட்டும் ஊழல் இல்லாது போகுமா? இப்போதெல்லாம் சர்வீஸ் கமிஷன் பரீட்சையின் கேள்விந்தானே வெளியாகிறது. அப்படியிருக்க இந்த நுழைவுத் தேர்வு கேள்வித் தான் 'அவுட்' டாகாது என்பது என்ன நிச்சயம்? கமிட்டி உறுப்பினர்களாக சுதந்திரமாகவும், நாணயமாகவும் உள்ளவர்களைப் போட்டு உண்மையாகவே எந்த தலையீடும் இன்றி—அவர்கள் செயல்பட அனுமதிக்கப்பட்டால் நேர்க் காணல் முறையை விடச் சிறந்த முறை இருக்க முடியாது.

பேட்டி: —ப்ரியன்

○ லதா



# கோமலின் தார்மீகக் கோபம்

சந்தோஷம் வெளிப்பட உற்சாகமாக இருந்தார் கோமல் சுவாமிநாதன். இரட்டிப்பு சந்தோஷம். இருக்காதா பின்னே? தாம் எழுதி, இயக்கிய திரைப்படம் 'ஓர் இந்தியக் கனவு'க்கு 1983–ஆம் ஆண்டுக்கான சிறந்த தமிழ்ப்படம் என்ற வகையில் வெள்ளித் தாமரைப் பரிசு; தமது புதிய நாடகமான 'நள்ளிரவில் பெற்றோம்' போடும் வெற்றி நடை.

இதோ, கோமல் பேசுகிறார். கவனிப்போம்.

''மகாராஷ்டிரா, கர்நாடகா, வங்காளம் போல், நம் தமிழ்நாடு நாடகக் கலையில் தீவிரமாக எதுவும் செய்ய முடியவில்லையே என்ற தாபம் எனக்கு உண்டு. இவர்களுடன் ஒப்பிடும் போது நாம் மிகவும் பின் தங்கியிருக்கிறோம். சிறுகதை, நாவல் அளவில் நாம் நிறைய சாதனைகள் புரிந்திருக்கிறோம். , ஆனால் மேடை நாடகம் – திரைப்படம் இவற்றைப்பொறுத்தவரை நாம் மிகக் கீழே இருக்கிறோம்.

மக்களுக்கு இதுதான் பிடிக்கும் என்று நாமாகக் கற்பனை செய்து கொண்டு சௌகரியமாக, கீழ்த்தரமான படைப்புக்களைக் கொடுக்கக் கூடாது. நல்லதை அவர்களுக்குக்கொடுத்தால் நிச்சயம் ஏற்றுக் கொள்ளுவார்கள். 'தண்ணீர் தண்ணீர்' படத்தை தேனி, கம்பம், உடன்குடி இவற்றைச் சுற்றியுள்ள பல கிராமங்களுக்குஎடுத்துக் கொண்டு போய்க் காண்பித்தேன். எல்லோரும் ரசித்தது மட்டுமல்ல, நகரத்திலுள்ள பார்வையாளர்களைப் போலவே நம்மைக் கேள்விகளும் கேட்கிறார்கள்.

எழுத்தாளர்களுக்குச் சமூகத்தின்பால் ஒரு பொறுப்பு உண்டு. அந்தப் பொறுப்பை உணர்ந்து கடமையாற்றுவது நல்லது. நாம் இப்போது மேடை நாடகங்களைப் பொறுத்தவரை எதுவுமே செய்யாமல் இருந்துவிட்டுப் பதினைந்து வருஷங்கள் கழித்துப் பார்த்தால் உருப்படியாக நாம் ஒன்றுமே உருவாக்கவில்லையே என்ற குற்றச் சாட்டைச் சுமக்கநேரிடும்.

கலையின் எந்த வடிவமாகட்டும், அதன் பின்னே ஒரு மாபெரும் உந்து சக்தி இருக்க வேண்டும். அப்போது தான் அது வீச்சும் வீர்யமும் கொண்டு பரிமளிக்கும்.

சமுதாய விழிப்பு, இம்மாதிரி இயக்கங்களினாலேயே உருவாகும். புரட்சிகரமான மேடை நாடக இயக்கம் உருவாகக்காத்திருக்கிறேன்.

இந்தியில் அர்த், அர்த் சத்யா, ஜானே பீ தோ யாரோ, சுபா போன்ற மொத்த சமூகக் குறைபாடுகளைச் சுட்டிக் காட்டும் படங்களும் சமீபத்தில்வெளியாகி, சக்கைப்போடு போடுகின்றன. இவற்றின் வெற்றிக்கு இன்னொரு காரணமும் உண்டு. அவைதாம் பத்திரிகைகள். இந்தப் படங்கள் எல்லாம் தயாராகும் போதும், வெளியான உடனேயும், சினிமா இதழ்கள் தவிர, ஆங்கில தினசரிகளும் பத்திரிகைகளும் இந்தப் படங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்தன. சமுதாய மாற்றத்தில் அக்கறை காட்டும் விஷயத்தில், நாடக – திரைப்படத் துறையோடு பத்திரிகைகளும் பெரும் பங்கு ஏற்க வேண்டும். கேளிக்கைப் படங்களைப் பார்க்கிறவர்களைப் போலவே மறுமலர்ச்சிப் படங்களைப்பார்க்கும் மக்களும் உருவாக, பத்திரிகைகளுக்குப் பெரும் பங்கு உண்டு.

தமிழ் சினிமா, சமூகப் பார்வையில் நாட்டம்

○ படப்பிடிப்பினிடையில் கோமல் (மேல் துண்டுடன் சிந்தனை)



கொள்ளவில்லை என்று ஒரேயடியாகச் சொல்ல முடியாது. 1935—ல் 'தியாக பூமி' அப்போதைய சமூகக் கருத்துக்களைப் பிரதிபலிக்கத் தொடங்கி, அந்தந்தக்காலக் கட்டங்களில் 'நாம்இருவர்' 'வேலைக்காரி' போன்ற பல படங்கள் வந்தன. பாலசந்தர், பாரதிராஜா இவர்களுக்குப் பிறகு மாற்றங்களும், திருப்புமுனைகளும் இருந்தும், களிப்பூட்டுவதே முக்கிய காரியம் என்பது போல் மிகப் பெரும் பாலான திரைப்படங்கள் வந்து கொண்டிருக்கின்றன. இதனால் நமது கலாசாரம் சீரழிந்து கொண்டிருக்கிறது. என்டர்டெயின்மெண்ட்கிற பெயரில்குதியாட்டமும் களியாட்டமுமாகக் கொடுத்து மூளையை மழுங்க அடிக்கிற மாதிரி செய்தால், அதை நாம் சமூகத்துக்குச் செய்கிற துரோகமாகத்தான் கொள்ள வேண்டும். கதையில் வருகிற சம்பவங்கள் நடைமுறை வாழ்க்கையோடு ஒட்டி யதார்த்தமாக அமைந்தால் பார்க்கிறவர்களுக்கு ஓர் 'இன்வால்வ்மெண்ட்' இருக்கும். அதை விட்டுவிட்டு வெறுமனே கூத்தடித்தால் எப்படி?''

'ஓர் இந்தியக் கனவு' படம் கோமல் இயக்கிய மூன்றாவது படம். அதிகார வர்க்கத்தினரும், காண்டிராக்டர்களும், வறுமையில் உழலும் ஒன்றுமறியா ஆதிவாசிகளை எப்படி ஆட்டிப் படைக்கிறார்கள் என்பதை ஒரு சமூக சேவகி கண்ட பிறகு, அவர்களை எப்படிப் போராட்டத்திற்குத் தயார் செய்கிறார் என்பது தான் கதை.



○ நள்ளிரவில் பெற்றோம் 'விடியும் வரை காத்திருப்போம்'



○ ஒரு இந்தியக் கனவு - வாத்தியார் ராமன், பூர்ணம், சுகாசினி



○ ஒரு இந்தியக் கனவு
ஆதிவாசிகளின் பிரச்னை என்பது ஓர் உருவகமே ,அதுபோல் ஓராயிரம் பிரச்னைகள் உள்ளன

''வியாபார ரீதியாக ஒரு படம் வெற்றியடையாமல் போனாலும் கூட, ஒரு தேர்வாளர் குழு அதைப் பார்த்து விட்டு, பாராட்டி அகில இந்தியப் பார்வையில் சிறந்ததென்று பரிசும் கொடுப்பது ஒரு தெம்பு கொடுக்கிறது!'' என்கிறார் கோமல்.

தயாரிப்பாளர்கள் திரு. டி. பி. வரதராஜனும், ஸ்ரீமதி விஜயலட்சுமி தேசிகனும் அண்மையில் புது தில்லி சென்று 'பரிசைப் பெற்று வந்தனர். பம்பாய் பிலிமோத்ஸவ் 84—வில் காட்டப்பட்டதோடு, 'இந்தியன் பனோரமா' பகுதியிலும் காண்பிக்கப்பட்ட ஒரே தமிழ்ப்படம் என்ற சிறப்புத் தகுதியும் 'ஓர் இந்தியக் கனவு' படத்துக்கு உண்டு.

சிறந்த தமிழ்ப்படம் என்ற பரிசு பெற்றதைக் கேள்விப்பட்ட பிறகும்கூட, யாருமே பாராட்டுத் தெரிவிக்கவில்லை என்பது தயா

சிப்பாளர் வட்டாரத்திலிருந்து வந்த தகவல். (போனால் போகட்டும் என்று தென்னிந்திய திரைப் படச் சங்கம் ஒரு கடிதம் அனுப்பியிருக்கிறது.) திரைப் படத் துறையிலுள்ளவர்களுக்கு அத்தனை பரந்த மனசு! அங்குமிங்குமாய்க் கிடைத்த சில தகவல்கள்:

- மூன்றெழுத்துக்காரர்களின் இரண்டு படங்கள் தேர்வில் போட்டியிட்டனவாம். பரிசு பெறும் முயற்சியில் பணம் ஏராளமாகச் செலவழிக்கப் பட்டதாம். மு. மு.வைப் பாதியிலேயே நிறுத்தும்படி, பொறுமையிழந்து போய்ச் சொன்னார்களாம் ஜூரிகள்! இதில் இன்னும் விசேஷம், பட்டப் பெயரையே கதாநாயகியாகக் கொண்ட மு. மு. நாயகிக்குப் பட்டம் கிடைக்க வேறு படாதபாடு பட்டார்களாம்!

- தமிழக அமைச்சர் ஒருவர் (திரைப்பட விநியோகஸ்தரும் கூட!) 'இந்தியக் கனவை'ப் பார்த்து விட்டு, இதை விநியோகித்தால் முதல்வர் கோபித்துக் கொள்வார் என்று கழற்றிக் கொண்டாராம். மனிதர் அதோடு விட்டிருந்தால் கூடப் பரவாயில்லை. கோபிசெட்டிப்பாளையத்தில் இரண்டு நாட்கள் ஓடிய படத்தை, மூன்றும் நாளிலிருந்து காண்பிக்கக்கூடாது என்று ஆணை பிறப்பித்தாராம் புண்ணியவான்!

- வரி விலக்கு அளிக்குமாறு மத்திய அரசு மாநில அரசுகளுக்குச் சிபாரிசு செய்த இருபத்தோரு திரைப் படங்களில் 'இந்தியக் கனவு'ம் ஒன்று. இருபதுக்கு ஏற்கனவே அந்தந்த மாநிலங்கள் வரிவிலக்கு அளித்து விட்டனவாம்; 'இந்தியக் கனவு'க்கும் வரி விலக்குப் பெற சாத்தியக் கூறுகள் உள்ளனவாம். தானத்தில் சிறந்தது நிதானம் அல்லவா? மெல்ல வரட்டும்.

**கோ**மல் நாடகம் எழுதும் முறை எப்படி? அவரே சொல்கிறார்:

''நாடகத்தில் திருத்தங்கள் செய்து இரண்டாவது பிரதி தயாரிப்பேன்! ரிகர்சல் நடக்கிற போது சில புதிய வசனங்கள், புதிய Punch சேர்க்கத் தோன்றும்.

'நள்ளிரவில் பெற்றோம்' நாடகம் எழுதத் தூண்டுகோலாயிருந்தது, 'துக்ளக்'கில் வந்த ஒரு புகார்க் கடிதம்! சமுதாயத்தின் அடிமட்டத்திலிருக்கும் ஒரு தொழிலாளி, பாடுபட்டுப் பண்படுத்திய புறம்போக்கு நிலத்தைத் திடீரென்று கோவில் நிலமென்று எடுத்துக் கொண்ட பின்னணிதான் இதன் கதைக் கரு. இந்தப் பின்னணியில், அதிகார வர்க்கமும், அரசியல்வாதிகளும் எப்படிச் செயல்படுகிறார்கள் என்பதை அப்பட்டமாகக் காண்பிக்கும் 'தியேட்டர்' வகையைச் சேர்ந்த மேடை நாடகமே 'நள்ளிரவில்பெற்றோம்'. (மிகக் கூரானவை கோமலின் வசனங்கள்மட்டுமல்ல; புங்கவனாக வரும் ஏ. கே. வீராச்சாமி, ஆளுங் கட்சித் தலைவராக வரும் 'வாத்தியார்' ராமன் இவர்கள் நடிப்பும் கூடத்தான்.)

இனி கோமலிடம் சில கேள்விகள்

இதுபோன்ற நாடகங்கள்-சினிமாக்களால் சமுதாய மாற்றம் ஏற்பட்டுவிடும் என்று நீங்கள் நம்புகிறீர்களா?

அரசியல் ரீதியான நடவடிக்கைகளே சமுதாயமாற்றத்தை உண்டாக்கும். ஆனால் பத்திரிகைகள் — நாடக — திரைப்படங்கள் அதற்கு உந்துதல் சக்தியாக இருக்கும். சமூகத்தின் எந்த சீர்கேட்டை வெளிச்சம் போட்டுக் காட்ட வேண்டுமோ, அதைச் செய்தோம் என்ற திருப்தி கலைஞர்களுக்கு இருப்பதோடு, அப்படிச் சுட்டிக் காட்டும் பொறுப்புணர்ச்சி தொடர்ந்து நிலைத்து நிற்கவும், ஒரு தூண்டுகோலாக இம்மாதிரி படைப்புகள் இருக்கும். நமக்குச் சில சமூகக் குறைபாடுகளின் மீது தார்மீகக் கோபம் இருக்கிறது. வெளியே காட்டத்திராணி இல்லாமல் ஒரு அலித்தனக் கோபமாக இருந்து விடுகிறது. மாற்றம் வேண்டும் என்பதில் யாருக்கும் அபிப்ராய பேதம் இல்லை.

உங்கள் கருத்துக்களில் கம்யூனிஸ வாடை வீசுவதாகச் சொல்லுகிறார்களே?

அடிப்படையான சமுதாயக் கருத்துக்களையும், அநீதிகளையும் வெளிச்ச வட்டத்தில் கொண்டு வரும் பொழுது, அவற்றில் கம்யூனிசக் காற்று வீசத்தான் செய்யும். சுஜாதா கூட ஒரு முறை சொன்னார்- 'என்னைச் சுரண்டிப் பார்த்தால் எனக்குள்ளும் ஒரு கம்யூனிஸ்ட் இருப்பான்' என்று. 'இருபதாம் நூற்றாண்டில் ஒரே ஒரு கட்சிதான் இருக்க முடியும்; அது ஏழைகள் கட்சியாக

**ரிகார்டு குறட்டை!**

பிரிட்டனிலுள்ள கவிட்வர் என்பவர் மிக அதிகமான சத்தத்துடன் குறட்டை விடுகிறார்! ஒரு மோட்டார் சைக்கிள் கிளம்புவது போன்ற சத்தம்! ஒலியை அளக்கும் 'டெஸிபல்' என்ற அளவைப்படி இந்தச் சத்தம் 86 டெஸிபல்! இதைவிட ஆச்சர்யம் அவர் மனைவிக்கு இது பழகிப் போய்விட்டது! இந்தக் குறட்டை விவரம் 'கின்னஸ்' புத்தகத்தில் இடம் பெறப் போகிறது!

('டெக்கான் ஹெரால்டி'லிருந்து) —அனிதா ராமச்சந்திரன்.



அவன்: ''அந்தத் தலைவர் சுத்த மோசம்!''

இவன்: ''ஏன்?''

அவன்: ''பொதுக் கூட்டம் முடிந்ததும் அவருக்குப் போட்ட மாலைகளுடன் சோடாப் பாட்டில்களையும் காரில் வீட்டுக்கு எடுத்துட்டுப் போயிடறார்!''

—உ. ராஜாஜி.



இருக்கும்' என்று 'நள்ளிரவில் பெற்றோம்' நாடகத்தில் வருகிறதே. அது உண்மையாகும்.

இப்படிச் சீரழிவையே சித்திரித்துக் கொண்டிருந்தால், தோல்வி மனப்பான்மையும் பெஸ்ஸிமிஸமும் மக்களிடம் தோன்றி விடாதா?

இப்போதிருக்கிற நிலையை யதார்த்தமாகக் காண்பிக்காமல் ஆப்டிமிஸ்டிக்காக— எல்லாம் ஒழுங்காக, நல்லதாகவே நடந்து கொண்டிருக்கிறது என்கிற மாதிரி காண்பித்தால் அது அபத்தமாக மட்டுமின்றி ஆபத்தாகவும் இருக்கும். மாற்றத்தை ஏற்படுத்தும் மனித சக்தியின் மீது நம்பிக்கை வைத்துத்தான் எழுதி வருகிறேன். அந்த மனித சக்தியைக் காண்பிக்கத் தவறும் போது தான் தோல்வி மனப்பான்மையும் பெஸ்ஸிமிஸமும் தோன்றும்.

வங்காளம், மகாராஷ்டிரா, மாதிரி 'தியேட்டர் மூவ்மெண்ட்'டுக்கு நீங்கள் ஏன் வித்திடக் கூடாது?

எனக்கு ஆசைதான். நிஜமான ஆர்வமுள்ள மாணவர்களைக் கொண்டு ஒரு தியேட்டர் ஒர்க்ஷாப் ஆரம்பிக்க ஆவல் இருக்கிறது. தில்லியில் நேஷனல் ஸ்கூல் ஆஃப் டிராமாவில், ஆல்காஸி இருந்தார். அவர் மாதிரி நாடகத் துறைக்குத் தன்னை முழுக்க அர்ப்பணித்துக்கொள்ளும் நபர்கள் தேவை. தமிழ் நாடக மேடையைப் பொறுத்த வரை திரு. எஸ். வி. சகஸ்ரநாமம் அவர்கள் ஒரு சகாப்தம். சிறந்த நடிகர்களை மட்டும் அவர் தமது குழுவில் உருவாக்கவில்லை; பி. எஸ். ராமையா, தி. ஜானகிராமன், கு. அழகிரிசாமி போன்ற தலைசிறந்த எழுத்தாளர்களையும் நாடக மேடைக்கு வெற்றிகரமாக அறிமுகப்படுத்தினார். சமயம் வரும்பொழுது தியேட்டர் ஒர்க்ஷாப் திட்டத்தைச் செயல்படுத்த முடியுமென்று நம்புகிறேன்.

இப்படி வெறுமனே குறைபாடுகளை மட்டும் சுட்டிக் காட்டிவிட்டால் போதுமா? நிவாரணம் என்ன என்பதை ஏன் கவனிக்கத் தவறுகிறீர்கள்?

சமுதாயக் குறைபாடுகளை மக்கள் உணரும் வகையில், அவர்களைத் தயார் செய்வதுமுதல்படி. அவர்கள் சரியாக உணர்ந்து விட்டாலே, அந்தக் குறைபாடுகளை நீக்கவும், தவிர்க்கவும் ஒரு மாற்றம் கிடைக்கும் என்பது என் நம்பிக்கை. இந்தத் தனித் தனிக் குறைபாடுகள் எல்லாமே மாற, இந்தச் சமுதாய — அரசியல் அமைப்பே மொத்தமாக மாற்றப்பட வேண்டும்.

கோமல் — சில குட்டித் தகவல்கள்:

● 'புதிய பாதை' என்ற முதல் நாடகம் 1953—ல் மேடையேறிய போதுகோமலுக்கு வயது பதினெட்டு. 'நள்ளிரவில் பெற்றோம்' இவரது இருபத்தொன்பதாவது நாடகம்.

● நாடகம் பார்க்க இன்னும் அதிக பட்ச மக்கள்— குறிப்பாகத் தொழிலாளர்கள் — வந்து பார்க்கிற நிலையில், குறைந்த பட்சக் கட்டணம் வைக்கவும் யோசனை செய்து வருகிறார்.

● ஏராளமான நூல்கள் படிக்கிறார். பெரும்பாலும் அரசியல், சமூக, பொருளாதார நூல்களே. தியேட்டர் பற்றிய நூல்களும் அதிகம்.

● கல்லூரியில் படிக்கிற காலத்தில், காங்கிரஸ்கட்சியிலிருந்த கோமல், பிறகு மார்க்ஸ், எங்கல்ஸ் நூல்களைப் படித்த பிறகு தமக்குள் மாற்றம் ஏற்பட்டதாகச் சொல்கிறார்.

● 1955—ல் ஆவடி காங்கிரஸ் மாநாட்டுக்கு வந்தவர், அப்படியே சென்னையில் தங்கி விட்டார்.

● ''சுதந்திரத்திற்குப் பிறகு வளர்ச்சியே இல்லை என்று சொல்ல மாட்டேன். ஆனால் ஒரு குறிப்பிட்ட வர்க்கம் அப்படியே இருக்கிறது; தேங்கிப்போய் அடிமட்டத்திலேயே இருக்கிறது. பொருளாதாரப் பங்கீட்டில் தகராறு'' — கோமல்.

● 1961—ல் திருமணம். ஒரு பெண்; இரண்டு பிள்ளைகள். பெண்ணுக்குப் பெயர் தாரிணி. அலையோசையில் வரும் லட்சியப்பெண்ணான தாரிணி நினைவாகப் பெயர் வைத்தாராம். பிள்ளைகளில் சத்தியமூர்த்தி (தீரர் சத்யமூர்த்தி நினைவாக) கிண்டி பொறியியற் கல்லூரி மாணவர்; ரவி பத்தாவது வகுப்பு.

● தஞ்சாவூர்க்காரரான கோமல், கர்நாடக இசையை ரசிப்பவர், குறிப்பாக பாலமுரளி, லால்குடி.

● முழுநேர எழுத்தாளர்.

● திரைப்படத்துக்காகஒரு புதிய ஸ்கிரிப்ட் தயாரித்துக் கொண்டிருக்கிறார். தேசியத் திரைப்படக்கழகத்தின் உதவியுடன் படம்தயாரிக்க இருக்கிறார்.

'இவ்வாண்டின் சிறந்த இந்தியப் படம்' என்ற பெருமையை ஒரு தமிழ்ப் படம் அடைவதென்பது ஒரு தமிழகக் கனவாகவே இருந்து வருகிறது. அந்தக் கனவு என்றேனும் நிறைவேறும் என்ற நம்பிக்கை அடியோடு பொய்த்துப் போகாதிருக்க கோமல் போன்ற ஓரிருவர் தான் உதவி வருகிறார்கள்.

—சாருகேசி

மேலட்டை: கோமல்

வண்ணப்படம்: யோகா

# நடுத்தர வயதா? நடுங்க வேண்டாம்!



○ டாக்டர் எஸ். விஜயகுமார்



அலுவலகத்திலிருந்து களைத்துச் சோர்ந்து வீடு திரும்புகிறீர்கள். ஆறுதலாய் நாலு வார்த்தை பேச வேண்டிய மனைவியின் முணுமுணுப்பு காதில் விழுகிறது. அதைவிட அதிர்ச்சியாகப் பையனின் பள்ளிக்கூடத்திலிருந்து வந்துள்ள எச்சரிக்கைக் கடிதம்.

''உங்கள் பையன் இந்த வாரம் முழுவதும் பள்ளிக்கு வரவில்லை. லீவு லெட்டரும் இடையாது. உடனேபிரின்ஸ்பாலை வந்து சந்திக்க வேண்டியது...''

என்ன விஷயம் என்று கேட்கிற மாதிரி மனைவியை நிமிர்ந்து பார்க்கிறீர்கள்.

''யாரு கண்டா? தெனமும்ஸ்கூலுக்குப்போறேன்னு தான் பையைத் தூக்கிட்டுப் போறான்... எங்க போயித் திண்ணை தூங்குதோ...''

சமயம் தெரியாமல், வெளியே சுற்றி விட்டு அப்போதுதான் உள்ளே நுழைகிற பையன்... அடக்க முடியாத உங்கள் ஆத்திரம், காட்டுத் தனமாகக் குழந்தையை அடித்து விட்டோமோ என்று பின்னால் வருத்தப்பட்டாலும், முதலில் அவன் செம்மையாக வாங்கிக் கொள்கிறான். பிரச்னை அதோடு நின்று விடுகிறதில்லை. மறுநாள் எந்த முகத்தை வைத்துக் கொண்டு பிரின்ஸிபாலைப் போய்ச் சந்திப்பது என்கிற கவலை இரவெல்லாம் உங்களைத் தூங்க விடாமல் அடிக்கிறது.

''சே! என்ன குடும்பம்! என்ன வாழ்க்கை'' என்று அலுத்துக் கொண்டாலும் இதுதான் வாழ்க்கை.... இதுபோன்ற சிறியதும் பெரியதுமான பல கசப்புக்களை ஜீரணிப்பதில்தான் வாழ்க்கையின் வெற்றியைக் காண முடிகிறது.

நடுத்தரக் குடும்பமாகட்டும். :மிகவும் வசதியான குடும்பமாகட்டும். வாழ்க்கைப் பிரச்னைகள் பலவற்றைச் சமாளித்துத்தான் ஆகவேண்டியிருக்கிறது. இந்த மாதிரிப் பிரச்னைகளைச் சமாளிக்க வேண்டிய நிலை பெரும்பாலும் நடுத்தர வயதுக்காரர்களுக்குத்தான் ஏற்படுகிறது.

இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலேயே நடுத்தர வயதுக்காரர்களின் பிரச்னைகளைப் பற்றி மருத்துவரீதியாகச் சிந்திக்கத் தொடங்கி விட்டார்கள் என்கிறார் டாக்டர் எஸ். விஜயகுமார். டாக்டருடன் உரையாடியபோது பல சுவையான தகவல்கள் தெரிய வருகின்றன.

நடுத்தர வயது என்பது என்ன? ஆரம்ப நாட்களில் இப்படியொரு பகுப்பே இருந்திருக்க முடியாது. ஆதிகால மனிதனின் சராசரி வயதே பதினெட்டுத்தான். கிரேக்க ரோமானிய நாகரிகங்கள் என்று வரலாற்று முக்கியத்துவம் பெற்ற காலங்களில் சராசரி வயது முப்பத்தைந்து ஆண்டுகளாகவே இருந்திருக்கிறது. இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் நாற்பத்து ஏழாக இருந்த சராசரி வயது இப்போது எழுபத்து ஒன்று ஆக உயர்ந்து விட்டது. மனிதனின் வாழ்நாள் கூடுதல் ஆகிக் கொண்டே போவதை யொட்டி, மற்ற எல்லாப் பிரச்சினைகளையும் போல் இந்த நடுத்தர வயதுக்கான பிரச்னைகளும் அதிகமாகி விட்டன.

இப்போதைய நிலவரப்படி 24 முதல் 48 வயது வரை நடுத்தர வயது என்று கொள்ளலாம்.

'நாற்பதில் தான் வாழ்க்கை தொடங்குகிறது'' என்னும் தலைப்பில் 1932—ஆம் ஆண்டிலேயே வாலடர் பி. பிக்கின்ஸ் எழுதிய நூல் வெளியாகி விட்டது. 'டைம்' பத்திரிகை 1956—இல் 'கமாண்ட் ஜெனரேஷன்'. என்ற தலைப்பில் ஒரு கட்டுரை வெளியிட்டதையும் குறிப்பிட






வேண்டும். இவை தவிர: 'மிடில் ஏஜ் க்ரைஸிஸ்' என்கிற நூலும், 'ஹாஃப்'ஸ் அஃப்ரைட் ஆஃப் வர்ஜீனியா வுல்ஃப்' என்னும் திரைப்படமும் கூட நடுத்தர வயதுக்காரர்களின் பிரச்னைகளை மையப்படுத்தியவைதான்.

குழந்தை மருத்துவம், வயதானவர்களுக்கான மருத்துவத் துறை என்று (Paediatrics Geriotrics) உள்ள மாதிரியே, நடுத்தர வயதுப் பிரச்னைகளுக்காக என்று (Mediatrics) துறை ஏற்பட வேண்டும் என்று கூட ஓர் ஆங்கிலேய டாக்டர் சொன்னதுண்டு. அந்த அளவுக்கு இது சிறப்பிடம் பெற்று விட்டது.

வாழ்க்கை என்பதை அனுபவித்து மகிழ அதிகமான காலம் கிடைத்து விட்டது. வாழ்க்கை வசதிகளும் தினம் தினம் கூடுதலாகக் கிடைத்துக் கொண்டே இருக்கின்றன. தொழிற்சாலையில் வேலை பார்க்கிறவர்களாலும்கூட காபி, தேநீர், மின்விசிறி, சில குறைந்த பட்ச ஆடம்பரங்கள் எல்லாம் தேவைப்படுகின்றன. மேலை நாடுகளில் வாரம் இரண்டு நாள் ஓய்வு உண்டு. இப்போது இதை மூன்று நாட்களாக உயர்த்தவேண்டும் என்று கோரிக்கைகள் எழுந்துள்ளன. நிறைய உழைக்க வேண்டும். சம்பாதிக்க வேண்டும். அப்புறம் நிம்மதியாக ஓய்வெடுத்து மனசையும், உடலையும் சமநிலைப்படுத்த வேண்டும் என்கிற வேட்கையின் விளைவு இது.

வாழ்க்கை முறையும் மிகவும் மாறிவிட்டது. கணவன் ஒருபுறம் ராஜா மாதிரி தர்பார் நடத்திக் கொண்டிருந்த காலம் போயே விட்டது. மனைவியுடன் குடும்ப வேலைகளைப் பகிர்ந்து கொண்டாக வேண்டிய கட்டாயம்... அவளும் கணவனுக்குச் சமதையாய் வேலை பார்த்துச் சம்பாதிக்க வேண்டிய அவசியம்... நிறையச் சம்பாதித்தால் நிறைய அனுபவிக்கலாம் என்கிற சிந்தனை இப்போது எங்கும் பரவி விட்டது.

கடந்து பத்து ஆண்டு சளை மட்டும் எடுத்துக் கொண்டால் பெரிய பெரிய நிறுவனங்களில் எல்லாம் நடுத்தர வயதுக்காரர்களே முக்கியமான பதவிகளில் அமர்ந்திருப்பதைக் காண முடிகிறது. அரசியல் அரங்கம் என்று எடுத்துக் கொண்டால் கூட வயதானவர்கள், அனுபவசாலிகள் என்கிற மதிப்பீடுகளெல்லாம் போய், நடுத்தர வயதுக்காரர்களின் செல்வாக்கே ஓங்கியிருக்கிறது...

ஸிக்மெண்ட் ஃப்ராய்டின் தத்துவங்கள் உருவானதே அவருடைய நடுத்தர வயதுக் காலத்தில் தான். இந்தக் காலத்தில்தான் சிந்தனைகள் கூர்மைப்பட்டு 'கிரியேட்டிவ் எபிலிடி' அதிகமாகிறது.

இந்தப் பருவத்தில், நான்கு விதங்களில் முக்கியமான மாற்றங்கள் ஏற்படுகின்றன. உடற்கூறுகளில் ஏற்படுகிற மாற்றம், சமுதாயச் சூழலில் ஏற்படுகிற மாற்றம், பொருளாதார மாற்றங்கள் உளவியல் ரீதியிலான மாற்றங்கள். இவை மனிதனை வெகுவாகப் பாதிக்கின்றன. டென்ஷன், தூக்கமின்மை காரணமாக ரத்தஅழுத்தம், இருதய நோய் அல்சர், எடை கூடுதல், டயாபடீஸ் கூட வருகிற நிலை ஏற்படுகிறது. இந்த வேலையை இன்னும் ஒரு நாளில் முடித்தாக வேண்டுமே என்கிற பரபரப்பு ஏற்பட்டு விட்டால் சிலருக்கு வயிற்றுப் போக்குக் கூட (Nervous Diarrhoea) வந்துவிடுகிறது. டென்ஷன் அதிகமாவதால் ஆஸ்துமா நோய் கூட வரும் வாய்ப்பு உண்டு.

இருபத்தைந்து இருபத்தாறு வயதுகளில் உள்ள அபரிமிதமான திறமையும் வலுவும் வரவரக் குறைவது இயல்பு... எவ்வளவுக்கு எவ்வளவு செயல்பாடுகளில் இறுக்கம் (Stress) அதிகமாகிறதோ அதற்கேற்ப இது நிகழும். மற்றவர்களோடு போட்டியிட்டு முன்னேறி நம்முடைய திறமையை வெளிக்காட்டக் கடுமையாக உழைத்தாக வேண்டி வருகிறது. காலை ஏழரை மணிக்கு வீட்டை விட்டுப் புறப்பட்டு இரவு பத்து மணி வரை ஓய்வு ஒழிச்சல் இல்லாமல் வேலை பார்க்கிறவர்கள் பலர். ஓய்வு, தூக்கம், சரிவரக் கிடைக்காது. சாப்பாடும் வேளைக்கு அமையாது. விளைவாக ஏற்படுகிற பரபரப்பினால் கவலையால்,

---

எங்கள் கல்லூரிப் பேராசிரியருக்கு ஒரு சுபாவம். எப்போதும் உரையாற்றும்போது ஒரு வாக்கியத்தைக் கூறுவார். பின்பு அதே வாக்கியத்தை ஆரம்பித்துப் பாதியில் நிறுத்துவார், மறுபாதியை மாணவிகள் கூறி முடிக்கவேண்டும்.

ஒருநாள் பேராசிரியர் உரையாற்றிக் கொண்டிருக்கும் போது இரு மாணவிகள் பேசிக் கொண்டிருந்தார்கள், கோபமுற்ற பேராசிரியர் அவர்களை எழுந்து நிற்கச் சொன்னதோடு, 'இது மாதிரி நீங்கள் பேசிக் கொண்டிருந்தால் நான் உங்களை வெளியே போகச் சொல்லி விடுவேன்' என்றுகத்தினார்.

பழக்க தோஷம். மறுபடியும் அவர் சுபாவப்படி 'இது மாதிரி நீங்கள் பேசிக் கொண்டிருந்தால்...' என்று நிறுத்தினார்.

'நான் உங்களை வெளியே போகச் சொல்லி விடுவேன்' என்று ஒரு மாணவி சொன்னாளே பார்க்கலாம், வகுப்பில் எழுந்த சிரிப்பலைகள் அடங்குவதற்கு வெகு நேரமானது.

—நித்யா சங்கர்.



மாபான் என்றழைக்கப்படும் பூர்வீகக்குடிகள் வாழும் பகுதி சூடான் நாட்டில் உள்ளது. உலகிலேயே மிகவும் நிசப்தமான இடங்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது. இந்தப்பகுதியில் சாதாரணமாகக் கேட்கப்படும் சப்தம் ரெப்ரிஜிரேட்டரில் எழும் சப்தத்தில் பத்தில் ஒரு பங்குதான். இங்கு கேட்கப்படும் சட்தங்களெல்லாம் மாடு கத்தும் சப்தம்; பறவைகளின் சங்கீதம்; மழைத் துளிகள் தரையில் விழும்பொழுது எழும் 'டப்டப்' சத்தம்; இவைதான்! இதன் காரணமாக மாபான் பூர்வீகக் குடியினருக்குக் கூர்மையான செவி உணர்வு. அவர்களால் 100 மீட்டர்களுக்கு அப்பால் சாதாரணக் குரலில் ஒருவர் பேசுவதை எளிதாகக் கேட்க முடிகிறது.

—கனகா ராமதுரை.



இரைப்பையில் அமிலம் அதிகமாகச் சுரக்கும். சாப்பாடில்லாமல் வெறும் வயிற்றில் சுரக்கும் அமிலம் காரணமாக அல்சர் வருகிறது. இரத்த அழுத்தம் ஏற்படுகிறது. வெறுமே உட்கார்ந்து சாப்பிடுவதால் எடை கூடி, கொலஸ்ட்ரால் அதிகமாகிறது. இருதயம் பாதிக்கப்படுகிறது. நன்றாய் முறுக்கேறிய கயிற்றைச் சற்றுத் தளர்த்தி நெகிழ வைக்கிற மாதிரி உடம்பையும் நாம் நெகிழ வைக்க வேண்டும். உடற்பயிற்சி, தியானம் போன்று கண்டிப்பாக எதிலாவது உடலையும் மனசையும் பழக்கப்படுத்திக் கொண்டாக வேண்டும்.

பரம்பரையாகச் சர்க்கரை வியாதி உள்ளவர்களானால், டென்ஷன் காரணமாகச் சீக்கிரமே நோய் வந்து விடுகிறது. ஆரம்பத்திலேயே கவனிக்காமல் விட்டு விட்டால் நோய் முற்றி விடுகிறது.

எதையெடுத்தாலும் தேவையற்ற பயம். ஏற்படுகிறது. வெளியூருக்கு மாற்றி விடுவார்களோ, அப்படி மாற்றி விட்டால் குடும்பத்தை அழைத்துப் போக முடியாதே, குழந்தைகளின் படிப்பு வீணாகி விடுமே, குறைந்த சம்பளத்தில் இரண்டு குடும்பம் என்று எப்படிச் சமாளிப்பது – என்றெல்லாம் கவலைகள்,பயங்கள்பிடுங்கித் தின்னுகிற நிலை பலருக்கு உண்டு. இந்த மாதிரியான டென்ஷன்கள் ஏற்படாமல் மனசைத் தெளிவாக வைத்திருக்க மாற்று ரசனைகள் உதவுகின்றன. சங்கீதம் கேட்பது, புத்தகங்கள் படிப்பது, விளையாட்டுக்கள் போன்று மனசுக்கு மிகவும் பிடித்த காரியங்களில் ஈடுபடுவதன் மூலம் அமைதி காண முடியும்.

சில அபூர்வப் பிரகிருதிகள் உண்டு. வீட்டை விட்டுப் புறப்பட்டு அலுவலகம் போய் விட்டால் வீட்டைப் பற்றிய சிந்தனைகளை மறந்து விடும். அதே போல், அலுவலகத்தை விட்டு வெளியேறி விட்டால், அலுவலக வேலைகள், கவலைகள் எல்லாம் மறந்து விடும். இது ஒரு மாதிரியான 'கம்பார்ட்மெண்ட்' வாழ்க்கை. இவர்களுக்கு இந்த டென்ஷன் பாதிப்புக்கள் ஏற்பட வாய்ப்புக்கள் குறைவு. ஆனால் வீடு, அலுவலகம் என்கிற வித்தியாசமே இல்லாமல், எப்போதும் சிந்தனைகளைக் குழப்பிக் கவலைப்பட்டுஎதையாவது பறிகொடுத்துவிட்ட மாதிரி அலைகிற நிலையிலும் பலரைக் காண முடிகிறது.

சமுதாயச் சூழல் காரணமாகப் பல சிந்தனைகள். ஒரு முக்கியமான பதவியில் அமர்ந்து விட்டால், பதவிக்குரிய கௌரவத்தைக் காப்பாற்றியாக வேண்டுமே என்கிற கவலை... நம்மை நம்பி மிகப் பெரிய பொறுப்பை ஒப்படைத்து விட்டார்களே, அவர்களுடைய நம்பிக்கையைச் சிதைத்து விடாமலிருக்க வேண்டும்என்கிற பரபரப்பு. 'மிடில் ஏஜ்' என்கிற பருவம் தான், குடும்பமாகட்டும், வெளியுலகமாகட்டும், பல விதமான பொறுப்புக்களை ஏற்று வெற்றி காணவேண்டிய அனுபவத்தைத் தருகிறது. குழந்தைகளின் எதிர்காலம் பற்றிய கவலைகள், திருமணம் பற்றிய சமுதாயப் பிரச்னைகள். இன்னும் கொஞ்ச நாளில் ஓய்வு பெறுகிற போது தேவையான வசதிகள் இருக்க வேண்டுமே என்கிறசிந்தனை—என்று நாலா புறமும் முற்றுகையிடுகிற போக்கைச் சமாளிக்க வேண்டி வருகிறது.

பொருளாதாரப் பிரச்னைகளும் ஏராளமானவை தான். நேற்று வரை நம்முடைய பணம் என்கிற சிந்தனையில்லாமல் அப்பாவின் பணத்திலேயே குளிர் காய்ந்த காலம் போய்த் தானே சம்பாதித்துச் செலவிடுகிற நிலை வருகிறது. தன்னுடைய பணம் என்கிற போது அக்கறை அதிகம் தான். தன்னுடைய எதிர்காலத்துக்கான சேமிப்பு, நிறையச் சம்பாதிக்க வேண்டும் என்கிற வேகம் ஏற்படுகிறது. பக்கத்து வீட்டில் கலர் டி.வி. வாங்கி விட்டார்கள். எதிர் வீட்டில் வி. சி. ஆர். வாங்கி விட்டார்கள்—என்று மனைவி வந்து நின்று முடுக்குகிற போது, அவர்களுக்குப் போட்டியாக நாமும் வாங்க வேண்டும் என்கிற அவசியம் ஏற்படுகிறது. பலவிதமான மனநோய்கள் வந்துவிடுகின்றன. இரவில் தூக்கம் பிடிக்காமல் கவலைகள் குடைந்தெடுக்கின்றன. நர்சரிப் பள்ளியில் குழந்தைகளைச் சேர்ப்பது தொடங்கி ஒவ்வொரு நாளும் அவர்களின் வளர்ச்சி, முன்னேற்றம், பழக்கங்கள் என்று எல்லாவற்றையும் கவனிப்பதில் எவ்வளவு 'டென்ஷன்' ஏற்படுகிறது!

சிலருக்கு வேடிக்கையான பயம் ஏற்படுவதுண்டு. செக்ஸ் சமாசாரம் தான். வயசாகி விட்டது என்று இவர்களே நினைத்துக் கொண்டு தளர்ந்து போய் விடுவார்கள். நிம்மதி கிடைப்பதில்லை, ஆனால்

செக்ஸ் விஷயத்தில் நடுத்தர வயதில் பயமும் நம்பிக்கையின்மையும் பொருளற்றது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

மூளையின் அளவு சுருங்கி இரத்த ஓட்டம் குறைந்து விடும். இதனால் மறதி அதிகமாகி விடும். Pre Senile Dimentia என்ற இந்த நிலை சிலருக்கு ஏற்படுவதுண்டு.

எல்லாவிதமான டென்ஷன்களிலிருந்தும் விடுபட அமைதியான வாழ்க்கை முறையைப் பழகிக் கொள்வது ஒன்று தான் வழி. பழைய காலத்தில் திண்ணை தோறும் பொழுதுபோக்கு சீட்டாட்டங்கள் நடக்கும். கிராமப் புறங்களில் இது சர்வ சாதாரணம். அதே போல் நாள் முழுவதும் உழைக்கின்ற பெண்களும் தாயக்கட்டம், பல்லாங்குழி என்றெல்லாம் விளையாடுவதுண்டு. இவையெல்லாம் போதுமான அளவு டென்ஷனைக் குறைக்கக் கூடியவையாக இருந்தன.

அமைதியான வாழ்க்கையை அனுபவித்து மகிழ்வதற்காக டாக்டர் விஜயகுமார் சிபாரிசு செய்கிற விஷயங்கள் இவைதான்:

—நேரம் தவறாத உணவுப் பழக்கம்.

—தேவையான உடற் பயிற்சி.

—மதுப் பழக்கம், புகைப் பழக்கம் இருந்தால் அவற்றைப் படிப்படியாகக் குறைத்துக் கொள்வது.

—மனத்துக்கு இதம் தருகிற சங்கீதம், யோகாசனம், காலாற நடப்பது, போன்ற மாற்று ரசனைகளில் ஈடுபடுவது.

எல்லாவற்றையும் விட முக்கியமான ''மருந்தாக'' டாக்டர் விஜயகுமார் குறிப்பிடுவது இதைத்தான். ''இரண்டு மணி நேரம் குடும்பத்தோடு ஒன்றி, மனைவி குழந்தைகளுடன் கலகலப்பாய்ப் பேசி மகிழ முடிந்தால், டென்ஷன், கவலை... எல்லாவற்றையும் தூசாக ஊதித் தள்ளிவிடலாமே... இதை விடவா பெரிய ரிலாக்ஸேஷன் இருக்கப் போகிறது?''

—சுப்ரபாலன்

# அன்னியர்கள்

## நா. காமராசன்

● மக்களின் பாமரத்தன்மைக்குத் திரை போடுவதன் மூலம் — தங்களுக்கு ஒரு தனித்தன்மையை வளர்த்துக் கொண்டு அதன் மூலம் சில சலுகைகளையும் பெற நினைக்கும் கலைஞர்களும் உண்டு. எந்த இடத்திலும் அவர்களுக்குத் தனி இடவசதி தேவைப்படுகிறது. இலக்கியத்திற்குள் இலக்கியம் — தேசியத்திற்குள் தேசியம் அவர்களுக்காக உருவாகிறது.

●● மக்களோடு பழகாமல் ஒதுங்கி இருப்பதோடு — அவர்களைக் கண்டாலே வெறுப்பு. அவர்களிடத்தில் ஓர் ஏளனப் பேச்சுக்கு — இதனால் வளரும் தற்பெருமை இவற்றின் சின்னமாக அவர்கள் மலர்கிறார்கள். தங்களது தற்பெருமையைக் கூட ''கவர்ச்சி மிகுந்த கர்வம்'' என அழைத்து சுயமோகத்திற்கு மனசிலே சிம்மாசனம் போடுகிறார்கள்.

●●● கலைஞனின் தனித்தன்மை என்பது பொது மக்களின் சராசரித்தன்மை சூடிக் கொள்ளும் சமுதாய மலராக அவர்களோடு ஒத்துப் போக வேண்டும். தன்னைப் பற்றி மட்டும் அக்கறைப் படுவதே தனித்தன்மை என்று ஆகி விடக் கூடாது. கற்பனை உலகத்தில் வாழ்கிற அவர்கள் ஒரு தவறான கணிப்பை உருவாக்கி விடுகிறார்கள். கலைஞன் வாழ்வதாகவும் — பொது மக்கள் வாழ்வதாகக் கற்பனை செய்து கொள்வதாகவும் நிஜத்திற்கு மூடு திரை போடுகிறார்கள்.

●●●● உலகத்தை இகழ்ந்து குறுகிய மனப்பான்மையோடு பிறரோடு ஒட்டாமல் வாழ்ந்து அந்நியர்கள் ஆகின்றனர். பொது மக்களோடு கலக்கும் போது தமது திறமைகள் கரைந்து போய் விடுவதாகக் கூட அவர்கள் சொப்பனாவஸ்தைப் படுகிறார்கள்.

●●●●● அந்தக் கற்பனை உலகவாதிகள் ஒற்றுமை உள்ளம் இல்லாத பிரிவினைவாதிகள். இத்தகைய பிரிவினைக் குழுக்கள் எப்போதும் மனித இயல்பின் எல்லைக் கோடுகளைத் தாண்டிய— நெறி பிறழ்ந்த அழுகிப்போன இலக்கியங்களையே படைத்துள்ளன.

●●●●●● வெட்கத் திரையை விலக்கி— இலக்கிய உலகில் அற்பச் செயல்களைத் திறந்த சந்தைப் பொருளாக்கியதும் அவர்களே. இலக்கியத்தின் மூலம் ஆபாசத்தைத் தேட மக்களுக்குக் கற்றுத் தந்ததும் அவர்களே.




கனிகான் செளத்ரி
ஜாபர் ஷெரீப்


அமெரிக்க வாழ் இந்தியர்களின் நிதி உதவி
விமான செலவினங்கள் பற்றி குற்றச்சாட்டு
வரிபாக்கி குற்றச்சாட்டு


நுழைவுத் தேர்வு கூடாது!
நுழைவுத் தேர்வு கட்டாயம் உண்டு!
நுழைவுத் தேர்வோ, தேர்வு இல்லாத நுழைவோ, எதுவானாலும் நான் நுழையாமெ ஒண்ணுமே நடக்காது!
லஞ்ச ஊழல்



கல்கி

1984 ஜூலை 1

மலர் : 42 இதழ் : 48

ரக்தாக்ஷி ஆனி 17



# ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு

**கா**ங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டத்தில் பேசிய பிரதமர், ''இந்துக்களுக்கும் சீக்கியருக்கும் இடையில் போராட்டமில்லை; சீக்கியருக்கும் மத்திய அரசுக்கும் இடையில் மோதலில்லை; வெற்றி, தோல்வி என்பது யாருக்குமில்லை; தேசிய ஒருமைப்பாட்டுக்கு ஓர் ஆபத்து வந்தது, ஒருமைப்பாடு வென்றது'' என்று அழகாகக் கூறியுள்ளார். தொடர்ந்து, ''இன்று நாடு நிம்மதிப் பெருமூச்சு விடுகிறது; ஆனால் அதில் துயரம் இழையோடுகிறது. ஒருமைப்பாட்டைப் பாதுகாக்கவே பலாத்காரத்தைப் பயன்படுத்த அவசியம் நேர்ந்தது; இனி ரணங்கள் ஆற முயற்சிகள் மேற்கொள்வோம்'' என்று அர்த்தமுள்ள வார்த்தைகளைப் பேசியுள்ளார்.

'பிரதமர் தமது பிடிவாதத்தால் உருவாக்கியதுதானே இந்த நிலைமை! பிந்தரன்வாலேக்கு இடம் கொடுத்து ஊக்குவித்ததே இந்திரா தானே' என்றெல்லாம் எதிர்க்கட்சியினர் கூறுவதைப் புறக்கணிப்பதற்கில்லை என்றாலும் முன்பு இந்திரா காந்தி ஒரு தவறான காரியம் செய்தார் என்பதால் இன்று பிரதமர் செய்த சரியான காரியத்தை வரவேற்று வாழ்த்தாமல் இருக்க முடியாது. ஆனால் பிரதமரின் பணி முடிந்துவிடவில்லை; இனிமேல் தான் பெரிய பொறுப்பு ஆரம்பமாகிறது. 'ரணங்கள் ஆற ஆவன செய்ய வேண்டும் என்றாரே' அதில்தான் இன்றைய ராணுவ நடவடிக்கையின் வெற்றி அல்லது தோல்வி நாளைக்கு நிர்ணயிக்கப்படும்! பாதி கிணறு தாண்டிய நிலையில் இருக்கிறார் பிரதமர்.

பெரும்பாலான பஞ்சாபியர் பிரிவினைவாதிகள் அல்ல, ஹிந்துக்களை துவேஷிப்பவரும் அல்ல. இந்தியாவில் இந்தியனாய்த் தலைநிமிர்ந்து பெருமிதத்தோடு வாழ நினைப்பவர்களே. ஆனால் இவர்களுக்குக் கூட தங்கள் புனிதப் பொற்கோயிலில் ராணுவம் நுழைந்ததால் அதிர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. எனவே இவர்களை அமைதிப்படுத்துவதும் இவர்களுடைய கருத்துக்களுக்கு மதிப்பளிப்பதாகக் காட்டிக் கொள்வதும் அவசியம். சண்டீகர் போன்ற ஏதேனும் ஒரு முக்கியமான விஷயத்தில் பிரதமர் உடனே பெருந்தன்மையுடன் விட்டுக் கொடுத்துத் தமது நல்லெண்ணத்தை நிரூபிப்பது நல்லது. ஜனநாயக உணர்வுகளும், மரபுகளும் பஞ்சாபில் மறுபடி தழைக்க வேண்டும்; ராணுவம் துரிதமாக வெளியேற வேண்டும்,; பொற்கோயில் நிர்வாகம் சீக்கியரிடம் சீக்கிரமே ஒப்படைக்கப்படவேண்டும்; பத்திரிகைத் தணிக்கை நாளையே வாபஸ் பெறப்படல் வேண்டும். இவற்றில் ஏற்படும் காலதாமதங்கள் சீக்கிய சகோதரரிடையே மனக்கசப்பையே வளர்க்கும்; சந்தேகங்கள் வலுக்கும்.

எல்லாவற்றுக்கும் மேலாக காங்கிரஸ் அல்லாத ஒரு கட்சி பஞ்சாபில் ஆட்சிக்கு வருமானால் அதைச் சகித்துக் கொள்ளக் கூடிய மனப்பான்மையைப் பிரதமர் பெற வேண்டும். பஞ்சாபில் மட்டுமின்றி எல்லா மாநிலங்களிலுமே ஜனநாயக அமைப்புகள் அடிமட்டத்திலிருந்து வலுப்பெறவும் மாநிலங்கள் அதிகமான அதிகாரங்கள் பெறவும் பிரதமர் உதவ வேண்டும். மாநிலங்களின் சுதந்திரமே தேசத்தின் ஒருமைப்பாட்டுக்கு உதவும். அவற்றை அடக்கி ஆள்வதன் மூலம் ஒருமைப்பாட்டைக் காக்க இயலாது.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

# ஒற்றுமை நீங்கிடில் அனைவர்க்கும் தாழ்வு!

**ப**ஞ்சாப் பிரச்னை விகவரூபம் எடுத்ததன் விளைவாக பம்பாயிலும் அதைச் சுற்றி, தானே, கல்யாண், பிவாண்டி முதலான இடங்களிலும் நிகழ்ந்த இனக்கலவரங்களின் ஆபத்தான தன்மையைப் பலர் முற்றிலும் உணர முடியாமல் போயிற்று.

210 பேர் உயிரிழந்தனர்; 700 பேர் காயமுற்றனர். உண்மைநிலை அதிகாரபூர்வமான இந்தப் புள்ளி விவரத்தை விடவும் அதிகமாகவே இருக்கும். பிவாண்டியில் ராணுவமும், போலீஸும் எடுத்த நடவடிக்கையின் விளைவாகக் கலவரங்கள் அடங்கின.

கலவரத்தால் ஏற்பட்ட நேரடித் துன்பம் தவிர விலைவாசிகள் உயர்வாலும் போக்குவரத்துத் தடங்கலாலும் மக்கள் அடைந்த துன்பம் கணக்கில் அடங்காது. உதாரணமாகப் பிவாண்டியில் மட்டும் ஒருநாளைக்கு 3 கோடி ரூபாய் மதிப்புள்ள மின்தறி துணி உற்பத்தி பாதிக்கப்பட்டது!

பிவாண்டி இனக்கலவரங்களுக்குக் காரணம் என்ன? பார்பானியைச் சேர்ந்த காங்கிரஸ் (இ) எம். எல். ஏ. வான ஏ. ஆர். கான், சிவசேனா தலைவர் பால் தாக்கரே படத்துக்குச் செருப்பு மாலை அணிவித்தாராம். இதை எதிர்த்து சிவசேனா தொண்டர்கள் பம்பாயின் பல்வேறு பகுதிகளில் நான்கைந்து நாட்களுக்குக் கதவடைப்பு செய்யுமாறு வர்த்தகக் கேந்திரங்களையும் தொழிலகங்களையும் வற்புறுத்தினர். இந்தக் கட்டாயக் கதவடைப்பு முயற்சியே இனக்கலவரங்களைத் தூண்டி விட்டுவிட்டது. சரி, பால் தாக்கரே படத்துக்கு ஏ. ஆர். கான் செருப்பு மாலை அணிவித்தது ஏன்? சுமார் ஒரு மாதம் முன்பாக பால்தாக்கரே நபி நாயகத்தை இழித்துரைத்தாராம்!

தாக்கரேயும் சரி, கானும் சரி, தாங்கள் அப்படிச் சொல்லவில்லை என்றும் நடந்து கொள்ளவில்லை என்றும் மறுத்துரைத்துவிட்டனர் என்றாலும் அதற்குள் கலவரங்கள் உச்ச கட்டத்துக்குச் சென்று விட்டன. கால தாமதமான மறுப்புக்கு முன்பாகவே நடக்கக் கூடாததெல்லாம் நடந்துவிட்டன.

இந்த இனக்கலவரங்களுக்கு அரசியல் பின்னணி உண்டு என்பதாகவும் நம்பப்படுகிறது. வசந்த் தாதா பாட்டீலை முதல்வர் பதவியிலிருந்து இறக்கி விடத் திட்டமிட்டு நடந்த சதி என்பதாகக் கருதப்படுகிறது. மாநிலத்தில் ஸ்திரமற்ற நிலையை உருவாக்கி விட்டால் பாட்டீல் ராஜினாமா செய்து விடுவார் என்று இவர்கள் நம்புவதாகத் தெரிகிறது.

இத்தகைய இனக்கலவரங்களால் பாதிக்கப்படுகிறவர்கள் வசதி மிக்கக் குடும்பங்களைச் சேர்ந்தவர்கள் அல்ல. அதிகமான துன்பத்துக்கு உள்ளாவோர் ஏழைபாழைகள் தாம். அவர்கள் தம்முடைய அற்ப சொற்ப உடைமைகளையும் இழந்து நடுத்தெருவில் நிற்கிறார்கள். குண்டர்கள் இவர்கள் குடிசைகளைக் கொள்ளையடித்தார்கள்!

கலவரம் பற்றி நீதி விசாரணை நடக்க வேண்டும் என்ற கோரிக்கை நியாயமானது. ஆனால் நீதி விசாரணை நடக்குமா? நடந்தாலும் அதன் கண்டுபிடிப்புக்கள் ஏற்கப்படுமா? அதன் சிபாரிசுகள் அமல்படுத்தப்படுமா? என்றெல்லாம் கேள்விக்குறிகள் எழுகின்றன. ஏனெனில் ஏற்கெனவே 1970–ல் இதே பிவாண்டியில் ஓர் இனக்கலவரம் ஏற்பட்டு நீதி விசாரணையும் நடந்தது. நீதிபதி மதனின் அறிக்கையும் கிடைத்தது. அதிலுள்ள யோசனைகள் எதுவுமே அமல்படுத்தப்படவில்லை. அறிக்கை எங்கோ தூசு படிந்து உறங்கிக் கொண்டிருக்கிறது.

மதச்சார்பின்மை என்ற கொள்கை மதத்தைப் புறக்கணிப்பது அல்ல. எம்மதமும் சம்மதம் என்ற அடிப்படையில் அரசு செயலாற்ற வேண்டும் என்பதே. இவ்வாறிருக்க சிலருக்கு மட்டும் ஜாதி மதங்களின் அடிப்படையில் தனிச் சலுகைகள் என்றால் மனக்குமுறல் இருந்து கொண்டே தான் இருக்கும். இது நீங்க ஒரே வழி சலுகை பெற்றிருப்பவர்கள் சரியான தருணத்துக்குக் காத்திருந்து தாமாகவே இனி எங்களுக்கு இச்சலுகைகள் வேண்டாம் என்று விட்டுக் கொடுப்பதுதான்.

பால் தாக்கரேயின் பேச்சைத் திரித்து வெளியிட்டதற்காகச் சில பத்திரிகைகள் மீது நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் பார்பானியைச் சேர்ந்த ஏ. ஆர். கான் மீதும் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் சில முஸ்லிம் அன்பர்களே அரசுக்குக் கடிதம் எழுதியுள்ளனர். இதேபோல் அனைத்து இந்தியருக்கும் ஒரே மாதிரியான சட்டம் இருக்கட்டும்; மத அடிப்படையில் சட்டத்தில் தனிச் சலுகைகள் வேண்டாம் என்று அந்தந்த மதத் தலைவர்களே கூறும் நாள் வரவேண்டும். மத அடிப்படையில் அமைந்த அரசியல் கட்சிகளுக்கும் இதேபோல்அந்தந்த மதத்தினரே முற்றுப்புள்ளி வைக்கவேண்டும். 'மதத்தையும் அரசியலையும் இணைத்துக் குழப்பிக் கொள்ளக் கூடாது. இது தேசத்தின் வளர்ச்சிக்கோ, ஒருமைப்பாட்டுக்கோ உதவாது' என்பதைச் சுதந்திரம் பெற்று 37 ஆண்டுகளாகியும் இன்னமும் நாம் உணரவில்லை. வேட்பாளரை நிறுத்துவது, வோட்டுப் பெறுவது எல்லாமே ஜாதிமத அடிப்படையில் திட்டமிடப்படுகின்றன. ஆனால் உண்மையில் சிறுபான்மைமக்களின் எதிர்கால நலன் ஜாதி அல்லது மதச்சார்பற்ற கட்சிகளின், அரசின் அரவணைப்பிலே தான் பலப்படும்.

இதை உணராது போனால் குண்டர்களின் ஆதிக்கமே நாட்டில் மேலோங்கும்.

# அமுதம்

## மசூர் பருப்பை சுவைத்தீர்களா?

துவரம் பருப்பிற்கு பதிலாக மசூர் பருப்பை உபயோகிக்கலாம்.

- புரத சத்து நிறைந்தது.
- துவரம் பருப்பைவிட விலை குறைவு.
- வேகமாக சமைத்து எரி சக்தியை குறைக்கும்.

எல்லாத் தமிழ்நாடு நுகர் பொருள வாணிப கழக சில்லறை விலைக்கடையிலும் மற்றும் அமுதம் சிறப்பங்காடியிலும் கிடைக்கும்.






**தமிழ்நாடு நுகர்பொருள் வாணிபக் கழகம்**

சென்னை

**500 கிராம் மற்றும் 1 கிலோ பாக்கெட்டுகளில் கிடைக்கும்.**

DIPR - 207 / 84 - 48 / MAC

# அற்புதங்கள் நிகழ்த்திய முஸ்லிம் துறவிகள்



- தாம் எழுதியவற்றைத் தாமே எரித்து விடுவாராம் ஷேக் முகமது ஹாசன் என்கிற துறவி. தப்பிய கடிதங்களிலிருந்து சில வரிகள்:

★ கண்களாலும், காதுகளாலும், இதயத்தாலும் நீங்கள் உலகத்தின் ஒரு பகுதியை மட்டுமே தெரிந்து கொள்ளுகிறீர்கள். மற்றொரு பகுதியை அறிவுக் கண் கொண்டு பார்த்துத் தெரிந்து கொள்ள வேண்டும்.

★ கடவுளை உண்மையாகத் தொழுபவர்களுக்கு நிச்சயமாக அறிவு ஒளியை அவர் இதயத்தில் ஏற்றி வைப்பார்.

- ஹஜ்ரட் ஷேக் சத்ருதீன் என்கிற பிரபல முஸ்லிம் துறவியின் சிஷ்யர் ஷேக் பதாவுல்லா அவதி என்பவர். எவ்வளவோ நோன்பிருந்து ஞானம் பிறக்கவில்லையே என்று ஒருநாள் குருவிடம் வருத்தப்பட்டுக் கொண்டார் சீடர். குருநாதர் சொன்னார்: ''படிப்பதை விட்டுவிடு. புத்தகங்களைத் தூக்கி எறிந்து விடு.''

சிஷ்யரால் எல்லாப் புத்தகங்களையும் தூக்கி எறிய முடியவில்லை. மிகவும் முயன்று சில முக்கியமான புத்தகங்களைக் கூடத் தூக்கி எறிந்து விட்டார். ஆனால் ஒருநாள் அழுது கொண்டே புத்தகங்களை யமுனை நதிக்கரையில் அழுக்குப் போகத் துடைத்துக் கொண்டிருப்பதைக் கண்ட மக்கள் 'ஏன் இப்படி செய்கிறீர்கள்?' என்றதற்கு அவர் சொன்னார்: ''புத்தகங்களைத் தூக்கி எறிந்து விடுவது கஷ்டமில்லை. ஆனால் குறிப்பிட்ட அளவுக்கு ஞானம் பெற்ற பிறகு இந்நூல்களே தெய்வீகப் பாதையில் தடைக்கற்களாகி விடுகின்றன!

- முகமது பின் துக்ளக்கைப் பற்றி நமக்குத் தெரியுமே! ஒருமுறை அவர் ஒரு பிரபல துறவிக்கு பரிசாக இரண்டு லட்சம் ரூபாய் கொடுத்தனுப்பினார். ''இந்தப் பிச்சைக்காரனுக்கு எதற்கு அவ்வளவு பணம்'' என்று திருப்பி அனுப்பி விட்டார் அவர். ஒரு லட்சம் ரூபாய் அனுப்பி வைத்தார் மன்னர். 'பணத்தால் எனக்கு எந்தவிதப் பிரயோஜனமும் கிடையாது. என்று அதையும் திருப்பி விட்டார் அவர். கடைசியாக மன்னர் இரண்டாயிரம் ரூபாய் கொடுத்தனுப்பினார். அதைப் பெற்றுக் கொண்ட அவர் உடனே தன் சிஷ்யர்களுக்கும் பிச்சைக்காரர்களுக்கும் பிரித்துக் கொடுத்து விட்டார். அவர் தான் பலவித அதிசயங்கள் புரிந்த ஷேக் குத்புதின் முன்னுவர்.

- கடவுளை அடைவதற்கான மார்க்கம் சுயகட்டுப்பாடு.

★ அளந்து பேசுங்கள். அநாகரீகமான பேச்சையும், அர்த்தமில்லாத வதந்திகளையும் பேசிக் கொண்டு திரியாதீர்கள்.

★ கண்களாலும், காதுகளாலும், கால்களாலும், கைகளாலும் பாலுணர்வு மூலமும் கிடைக்கக் கூடிய அற்ப சந்தோஷங்களை ஒழித்துக் கட்டுங்கள்.

இவ்வாறு கூறியவர் பிரபல முஸ்லிம் துறவியான ஷேக் நிஜாமுல் ஹக்.

- தன் வீட்டின் அருகில் உள்ள ஒரு இடத்தில் கை, கால், முகத்தை நபி (ஸல்) அவர்கள் அலம்பிக் கொண்டிருந்ததாகக் கனவு கண்டார் ஜமால் முல்தானி என்பவர். மறுநாள் காலை அவர் கனவில் கண்ட இடத்திற்குச் சென்ற போது ஆச்சர்யம் காத்திருந்தது. அந்த இடம் தண்ணீரால் நனைக்கப்பட்டு மிக ஈரமாக இருந்தது. அருகில் இருந்தவர்களிடம் சொன்னார் முல்தானி. ''நான் இறந்தால் என்னை இங்கு புதையுங்கள்.''

—ஜகத் எஸ். பிரைட் எழுதிய ''அற்புதங்கள் நிகழ்த்திய முஸ்லிம் துறவிகள்'' என்ற புத்தகத்திலிருந்து (ஜெய்கோ வெளியீடு)—

-தில்லப்பா

---

**முஸ்லிம் அன்பர்களுக்கு எங்கள் மனமார்ந்த ரம்ஜான் வாழ்த்துக்கள்**

---

# வட்டமேஜை



● கண்டனூர் ஸ்ரீநிவாஸ பெருமாள் கோவில் பிராகாரத்தில் உள்ள மூன்று விக்ரகங்களில் ஒன்றான "விகநஸர் என்றபெயர் புதிராக இருக்கிறது" என 10.6.84 கல்கியில் எழுதப்பட்டுள்ளது.

வைணவத்தில் கோயில் நிர்மாணம், பூஜை முறைகள் பற்றிக் கூறும் "பாஞ்சராத்ரம்", "வைகாநஸம்" என்ற இரண்டு ஆகமங்களில் வைகாநஸ ஆகமத்தை வகுத்தவர் விகநஸர்.

மதுரை

இரா. அழகிய நம்பி.

● "நேரம் நல்ல நேரம்" என்ற தலைப்பின் கீழ் எங்கள் குடும்பப் பத்திரிகையாம் "கல்கி" வழங்கும் விளம்பர நிகழ்ச்சிகள் எக்ஸலண்ட், மார்வலஸ், ப்யூட்டிபுல்... ஒவ்வொரு வாரமும் நிகழ்ச்சி இன்னும் சிறிது நேரம் தொடராதா என்ற ஏக்கத்தையே ஏற்படுத்துகிறது.

மயிலை,

ராஜேஸ்வரி பாலசுப்ரமணியம்

● 3.6.84 இதழில் அநுராதாரமணன் எழுதி வரும் "சொல் ஒன்று வேண்டும்" தொடர்கதையில் பல இடங்களில் "வார்டு பாய்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது. வார்டுபாய் என வழங்கி வந்த வழக்குப் பெயரை நீக்கிட நாங்கள் 5 ஆண்டுகள் போராடி "செவிலிய உதவியாளர்" (Nursing Assistant) என்ற உயர்நிலை பெற்றுள்ளோம்.

சென்னை—23,

எம். சௌந்திரராஜன்,
தலைவர்,
தமிழ்நாடு செவிலிய உதவியாளர் சங்கம்.

● முதல்வரிடம் 'கல்கி' வாசகர்கள் கேட்டிருந்த கேள்விகள் அருமையாக இருந்தன. சில கேள்விகளுக்கு முதல்வர் தரப்பிலிருந்து பதில் கிடைத்தால் மிகவும் அருமையாக இருக்கும்.

கிருஷ்ணகிரி,

ஆர். பூபாலன்.

● தான், தன் சுகம், தன் சந்ததியின் சுகம் என்று ஆணவம் பிடித்து அலையும் ஆண் வர்க்கத்துக்குத் தனது கருத்தாழமிக்க 'கோடு தாண்டிய சீதைகள்' கதையின் மூலம் சாட்டையடி கொடுத்திருக்கிறார் தேவிபாலா.

திருவல்லிக்கேணி,

எம். கே. குமார்.

● புரையோடிக் கிடந்த புண்ணை அறுவைச் சிகிச்சை மூலம் அகற்றியாகிவிட்டது. ஆனால், இதனால் ஏற்பட்ட ரணங்கள் ஆறச் சில நாட்கள் ஆகும். பாகிஸ்தான் வானொலி, டி.வி.களால் திசை திருப்பப்பட்ட நம் இராணுவத்தினர் சிலரைச் சாமர்த்தியமாக அடக்கிவிட்ட போதிலும், இதுவே பிரச்னையாகி விடாமல் பாதுகாக்க வேண்டும்.

சென்னை—5,

எஸ். வி. ராஜசேகர்.

● பல உலக சாதனைகளைச் செய்ய உதவிய பாரீஸ்நகர ஈபிள் டவர் தான் பலரைச் சோதனைக்குள்ளாக்கியது.. உயிர்களைப் பலி கொண்டு விட்டது என்பதனை அறியும் போது மனம் வேதனை அடைகிறது.

லால்குடி,

எம். இராஜேந்திரன்.

● தங்களால் மறக்க முடியாத வழக்குகளைப் பற்றி நீதிபதிகள் சிலர் சொல்லியிருந்த சம்பவங்கள் சுவையாக இருந்தன.

அரூர், மு. மதிவாணன்.

● ஜே. எஸ். ராகவன் எழுதிய "ஓம் க்ரீம் க்ரைம்" சித்திரக்கதை ஒவ்வொரு வாரமும் சிறுவர்களை மட்டுமல்லாது பெரியவர்களையும் ஆவலோடு படிக்கும்படி செய்து விட்டதோடு பத்து வாரத்தில் பளிச்சென்று முடித்தது குறிப்பிட்டுப் பாராட்டும்படியாக இருந்தது. ஓவியர் செல்லத்தின் கைவண்ணம் டாப்!

கும்பகோணம்—1,

பிரசன்னா ராஜன்.

● நமது நாட்டில் மக்களின் வரிப்பணத்தைச் செலவழித்து நடக்கும் எல்லா வேலைகளுமே கண்ட்ராக்டர்கள் மூலமாகவே நடைபெறுகின்றன. ஆனால் அந்த கண்ட்ராக்ட்டுகளில் நடைபெறுகின்ற முறைகேடுகள் கொஞ்ச நஞ்சமில்லை.

கண்ட்ராக்ட் வேலை நடைபெறும் இடங்களில் எவ்வளவு ரூபாய்க்கு டெண்டர் விடப்பட்டுள்ளது, கட்டிடம் கட்டும்போது எந்த அளவில் சிமெண்டில் மணல் கலக்க வேண்டும், சாலையென்றால் எவ்வளவு அளவு உயரம் கப்பிபோட வேண்டும் என்ற விவரங்களை ஒரு பெரிய போர்டில் எழுதி வைத்தால், தவறுகள் நடக்காமல் பொதுமக்களே (ஒரு சிலராவது) பார்த்துக் கொள்வார்கள் அல்லவா?

திருநள்ளாறு, கணேசன்.

(கடைசிக்கடிதம் பரிசுபெறுகிறது)

# சொல் ஒன்று உண்

# முதல் இந்தியப் பெண்

ஒரு வாரமாகத் தில்லி நகரில் மிஸ். பச்சேந்திரி தான் ஹீரோயின். எவரெஸ்ட் உச்சியில் ஏறிநின்ற முதல் இந்தியப் பெண். அகில உலக அளவில் இது வரை அதன் மீது ஏறி உச்சியைத் தொட்ட என்பது பேரில் நாலே பேர் தான் பெண்கள்.

காலையில் ஜனாதிபதியைச் சந்தித்து பகலில் சுற்றுலா அமைச்சர் அளித்த விருந்து உண்டு, பிற்பகலில் ராஜீவ் காந்தி தமது இல்லத்தில் அளித்த பாராட்டைப் பெற்றபின், ஒரு பத்திரிகையாளர் சந்திப்புக்கும் இரவு ஓபராயில் பார்ட்டிக்கும் ஓடிக் கொண்டிருந்த எவரெஸ்ட் கோஷ்டிக்கு மூச்சு விடக் கிடைத்த நேரத்தில் பார்த்துப் பேச முடிகிறது.

வெகு காஷுவலாக இருக்கிறார் பச்சேந்திரிபால். நீல ஜீன்ஸ், பச்சையில் குறுக்கு வரி போட்ட காலர் வைத்த ஸ்போர்ட்ஸ் பனியன். டென்னிஸ் ஷூ. கல்லூரி மாணவி போலக் காணும் இவர் சம்ஸ்கிருதத்தில் எம். ஏ. உத்தர பிரதேசத்தில் உத்தரகாசியில் படித்த இவர் சென்ற சில ஆண்டுகளாகவே மலைஏறும் பயிற்சியில் சீரியஸாக ஈடுபட்டு வந்தார். இந்த ஆண்டு ஒரு இந்திய கோஷ்டி எவரெஸ்ட் ஏறும் முயற்சியில் ஈடுபடுகிறது என்பது தெரிந்ததும் பெயர் கொடுத்தார். எழுபதுக்கு மேற்பட்டவர்களைப்பயிற்சிக்குத் தேர்ந்தெடுத்தார்கள். பயிற்சியில் தேறிய இருபது பேரில் ஒருவரே பச்சேந்திரி. இதை அடக்கமாகத் தெரிவிக்கிறார்.

எல்லாரும் அவரை ஒரே கேள்வி தான் கேட்கிறார்களாம். "எவரெஸ்ட் உச்சியைத் தொட்டபோது எப்படி இருந்தது?"

"எப்படி இருந்தது? என் கனவு பலித்தது. பிரார்த்தனை நிறைவேறியது. என் கூடவே வைத்திருந்த துர்க்கை விக்கிரகத்தை எடுத்து வைத்து நன்றியுடன் தொழுதேன். வாக்கிடாக்கியில் என் சாதனையை கோஷ்டித் தலைவருக்குத் தெரிவித்தார் எனக்கு முன் ஏறிய நண்பர். தலைவர் "முபாரக், முபாரக்" என்று கூவியது காதில் விழுந்தது. "சுக்ரியா" என்றேன் ஈனசுரத்தில்.

கொஞ்ச நேரத்தில் ஒருவரை ஒருவர் பாராட்டிக் கொண்டபின், திரும்ப இறங்குவதற்கு ஆயத்தமானோம். ஏறுவதை விட இறங்குவதில் இன்னும் கொஞ்சம் அக்கறையாக இருக்க வேண்டும்."

ஆம். சில எவரெஸ்ட் கோஷ்டிகள் வெற்றிகரமாக ஏறியபின் திரும்ப இறங்குகையில் விபத்துக்குள்ளான விபரங்கள் நம் நினைவுக்கு வருகின்றன.

பேச்சிலோ, பார்வையிலோ, நடத்தையிலோ 'சாதனை கர்வம்' சற்றும் தெரியவில்லை. 'இந்தியமலை ஏறுவோர் சங்கத் தலைவரும் நேபாளத்தில் பாரத தூதருமான திரு ஸரீன் சொல்வது போல, இந்த 'எவிஜியின்' மணமகளுக்கு உத்தரபிரதேச அரசாங்கம் ரூ. 50,000 பாராட்டுப் பரிசு அறிவித்திருக்கிறது. எவரெஸ்ட் குழுவுடன் சேருவதற்குச் சற்று முன்னர் தான் ஜாம்ஷெட்பூர் டாடா கம்பெனி பச்சேந்திரிக்கு ஒரு வேலை கொடுத்துள்ளது. அவர்கள் ஸ்போர்ட்ஸ் பிரிவில். இவளையும் எவரெஸ்ட் குழுவில் இருந்த மற்றும் ஆறு பெண்களையும் அவர்கள் குடும்பச் சூழ்நிலையில் ஒரு டாகுமெண்டரி சினிமாப் படம் எடுக்கிறார்களாம்.

பச்சேந்திரியைப் பார்க்கும் போதும் பேசிக் கொண்டிருக்கும் போதும் மலை ஏறுவதற்கு உடல் வலுவைவிட மன உறுதியும் உள்ளத்தில் ஆரோக்கியமும் அதிகம் தேவை என்று தோன்றுகிறது.

மலை ஏறுவது, உச்சியைத் தொடுவது என்பதெல்லாம் தனி மனிதர் சாதனையல்ல. இது ஒரு 'டீம்-ஒர்க்' என்ற கருத்து பேச்சிடையே அடிக்கடி வருகிறது. ஆரோக்கியமான கருத்து.

—டி. எஸ். வி.

○ கல்கி வாசகர்களுக்காக ஆட்டோகிராஃப்

Bachendri Pal
8/6/84

○ பச்சேந்திரி பால்



# வேங்கை வனம்

## அத்தியாயம் 10

### பொய்! பொய்! பொய்!

அந்தக் கருக்கல் விடியல் பொழுதுக்குக் கப்பம் கட்டிக் கொண்டிருந்த வேளையில்...

அதிவேகமாகப் புரவியில் ஆரோகணித்து வந்தவன் யார் என்று பரபரத்துப் பார்க்கிற போது...

அருகில் நெருங்கியதும்தான் பலருக்குப் பெருமூச்சு பறிந்தது. வந்தவன் காளிங்கன்.

இரவு பயணித்த தங்கை விடிகிற நேரமாகியும் திரும்பவில்லையே என்று பதறியடித்து ஓடி வந்திருக்கிறான்.

கூரை வேய்ந்த குடில் வாசலில் தங்கை இருக்கக் கண்டு, நிறைவு நிம்மதியைத் தழுவியது.

புரவியை விட்டிறங்கி வந்தவன், தங்கையை வெருவாகச் சினந்து கொண்டான். இரவு கண்மீது இமை போடவில்லை என்றான். நேரம் செல்லச் செல்லவே பதற்றம் மேலோங்கியது என்றான். அவனது துடிப்பு நிறைந்த மெய்ப்பாடுகள் அவனது கூற்றை உண்மை என்று பறைசாற்றின.

ஓரளவு மனம் குளிர்ந்த தியாகவல்லி, முறுவலித்தவாறு இரவு நடந்ததைச் சொன்னாள். அவளது தங்கிய நிலைக்குக் காரணம், தாமே என்று சிற்பியாரும் எடுத்துச் சொன்னார்.

காளிங்கனின் துருத்திக் கண்கள் எங்கோ துழாவுகின்றன. எங்கே அந்தச், சிலை?

தொலைவில் வார்ப்படத்துக்கான மண் கதை பூசிக் கொண்டிருப்பதைக் கவனிக்கிறான். பார்க்க அது சிலைபோலில்லை. ஏதோ சிதைபோல் அவனுக்குத் தெரிந்தது. எனவே அது குறித்துக் கேட்காமல், இரவு தங்கையிடம் வாதாடிய கௌரவத்துடனேயே மௌனமாக இருந்து விட்டான்.

''சரி, சரி! விடியல், வெளிச்சம் போடுவதற்குள் வீடு சேர்ந்தாக வேண்டும். புறப்படு தியாகவல்லி!''

அவசரமாகக் கூறிய காளிங்கன், தனது புரவியைப் பகுபதியிடம் ஒப்படைத்து விட்டு ரதத்தில் ஏறியமர்ந்து கொண்டான்.

எல்லாருக்கும் உரிய முறையில் எச்சரித்து விட்டு ரதத்தில் வந்தமர்ந்தாள் தியாகவல்லி. வேறொருவன் ரதத்தில் அமர்ந்து செலுத்தலானான்.

ரதம் படுவேகமாகச் செல்லத் தொடங்கியது.

காளிங்கன் மெல்லப் பேச்சை ஆரம்பித்தான்.

''தியாகவல்லி! இனி என் சுயரூபத்தைக் காட்டலாம் அல்லவா?''

கேள்வியில் அக்கினியின் வெறித் தாண்டவம்.

''அண்ணா! நாம் இன்னும் பாண்டிய மாமன்னரின் அசல் சுயரூபத்தையே சரிவரப் பார்க்கவில்லை. இதற்குள் உங்கள் சுயரூபம் விஸ்வரூபம் காணப் பிரலாபிப்பது பித்தமேறிய 'தனமாக' இருக்கிறது.''

மறுமொழியில் அலட்சியத்தின் குறித் தாண்டவம்.

''பின், நாம் எதற்காக இங்கு வந்தோம்? இத்தனை முயற்சிகளை மேற்கொண்டோம்?''

''பொறுங்களேன்; திருமேனிக்குத் திருமணமாகிற செய்தி தெரிய வேண்டாமா?''

''திருமேனிக்குத் திருமணமா?''

அவன் அலட்சியமாகச் சிரித்துக் கொள்கிறான்.

''திருமேனி என்றால் சிலை என்ற அர்த்தமுண்டு. வேங்கைவனம் சென்ற சிலைக்குத் திருமணமாகிற அழைப்பு வரவேண்டாமா?''

''ஓ... அதைச் சொல்லுகிறாயா?''

''எதைச் சொன்னால் சரிவரப் புரிந்து கொள்ளுகிறீர்கள்? யுத்த களத்தில் வெட்டிச் சாய்ப்பது மட்டும் வீரமாகாது. ஆட்டிறைச்சிக் கொட்டியிலும்தான் ஆடுகளை வெட்டிவெட்டித் தள்ளுகிறார்கள். அது வீரமாகுமா?''

''வீரத்தை மிகவும் குறைவாக எடை போடுகிறாய் தியாகவல்லி?''

''சாதாரணப் போர் வீரம் வேறு; அரசகுமார போர் வீரம் வேறு. முன்னது வெறி கொண்ட வேகம்; பின்னது அர்த்தமுள்ள விவேகம்! பின்னது உங்களிடமில்லையே என்றுதான் ஆதங்கப்படுகிறேன். பொறுங்கள்: நிற்பதற்கு இடம் கிடைத்தது. அதற்குள் கால்களை வெட்டிக் கொண்டு முடமாகி விடக் கூடாது. யுத்தம் என்பது தானாகக் காரண காரியத்தோடு பழுக்கவல்ல அரசியல் கனி! ராஜதந்திரம் என்கிற வைக்கோல் கொண்டு மாங்காயைப் பழுக்க வைப்பது போல இந்த அரசியல் கனியையும் பழுக்கச் செய்யலாம். அதற்குப்

—கோவி. மணிசேகரன்




பக்குவம் தெரிய வேண்டும். அது உங்களுக்குப் போதாது. என்னிடம் விட்டாய் விட்டது அல்லவா? நான் கவனித்துக்கொள்வேன். அதுவரை நீங்கள் திருமேனியிடம் வேங்கைமார்பனைக் குறித்து எவ்வளவுக்குக் கசப்பு நிறைந்த வெறுப்புப் புராணம் பாட வேண்டுமோ அவ்வளவுக்குப் பாடி முடியுங்கள்.''

தங்கையின் இந்த எரிச்சலூட்டும் பேச்சு அண்ணனுக்கு எரிதழலாக இருந்தது.

தியாகவல்லியின் இந்தப் போதனையிலும் ஓர் அரசியல் நெடி முனையிருந்தது. ஒருவன் மீது எவன் அதிகமான வெறுப்புக்களைச் சுமக்கிறானோ முடிவில் சுமப்பவனே வெறுப்பவனாகிறான்.

காளிங்கனுக்கு இது புரியக் காரணமில்லை.

ரதம் வீட்டு வாசலையடைந்து நின்றது.

காலைக் காற்று இதமாகத் தன்னை அறிமுகம் செய்து கொள்கிறது.

மூலக்கனல் கீழ்வானில் மூண்டு கொண்டிருந்தது.

இந்தப் பத்து நாட்களாக...

நாட்கள் ஆமை வேகத்தில் சென்று அடம் பிடிப்பதாக உணர்ந்தாள் தியாகவல்லி.

ஆ! இந்நேரம் வார்ப்படம் வேங்கைவனத்தில் திருமேனியுருவாகிப் பலரைத் திகைக்கச் செய்து கொண்டிருக்கும்.

அநேகமாகத் திருமணத்துக்கும் நாள் பார்த்திருப்பார்கள். ஆனித் திங்கள் ஆரம் பத்திலேயே நல்ல வளர்பிறை. திருமண ஓலை பாண்டியப் பேரரசுக்கு நிச்சயம் வந்தே தீரும்! அதன் பிறகு ஏற்படப் போகிற எதிர் நடவடிக்கைகளைப் பொறுத் திருக்கிறது இந்த அரசியல் நாடகம்!

யாரோ வருகிற அரவம் கேட்கிறது.

சிந்தனை அறுபட்டு நோக்குகிறாள், தியாக வல்லி.

அரண்மனைப் பணியாளன் உள்ளே நுழைந்து வணங்கி, ''இளவரசியார் உங்களை உடனே அரண்மனைக்கு வரச் சொன்னார்கள்'' என்று கூறி விடைபெற்றான்.

என்ன அவசரமாக இருக்கும்?

இந்தப் பத்து தினங்களில் ஒருநாள் மட்டுமே அரண்மனை சென்றாளும். அதன் காரணமாக இருக்கலாமோ?

தன்னை வெகுவாக அலங்கரித்துக்கொண்டு பல்லக்கில் புறப்பட்டாள்.

பல்லக்கு அரண்மனையை அடைந்தது.

அலங்காரச் சித்திரம் போல இறங்கிய தியாகவல்லி, நேரே அரண்மனையுள் பிரவே சித்து ஐந்து கட்டுக்களைக் கடந்து, அந்தப் புரத்துள் நுழைந்து இரண்டாம் மாடத்தை அடைகிறாள்.

காலைச் சூரியனின் பொற்கதிர்கள், அரண்மனையைக் கட்டிடக் காப்பியமாய் மின்னச் செய்கின்றன...

அங்கே...

திருமேனியும் ஒப்பனைச் செல்வியாக இருந் தாள். அந்த ஒப்பனையில் தமிழ்மணம் நிறைந்த ஓவியத் தன்மை தெரிந்தது.

''என்ன தியாகவல்லி! உடல் நிலை சரியில் லையா? ஒரு வாரத்துக்கு மேல் ஆளையே காணோம்!'' என்று அன்பு கலந்த உரிமை யுடன் வினவினாள் திருமேனி.

என்ன மறுமொழி கூறுவாள் தியாக வல்லி?

ஓர் ஆலோசனை சமயத்தில் உதயம் கண்டது.

''இளவரசி! நான் அடிக்கடி வருவதும் நீங்கள் என் மீது அபரிமிதமான அன்பு செலுத்துவதும் உங்கள் பழைய தோழி மந்திரிகுமாரிக்குப் பிடிக்கவில்லை. ஏதோ பொறாமை கண்டது போல நோக்குகி றார்கள். எதையோ உங்களிடமிருந்து நான் தட்டிப் பறித்துக் கொண்டது போல நோக்குகிறார்கள். என்னால் அந்த நிலை ஏன் என்றுதான் ஒதுங்க முயன்றேன்.''

''சீ! சீ! உனது நிலை என்ன? அவளது நிலை என்ன? இந்த வித்தியாசம் கூட உண ராது நீ ஒதுங்குவது உனது பலவீனம்! போகட்டும்! நீ தமிழ்ச்சங்கத்தைப் பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டாயே! இன்று கூடுகிறது. உன்னை அழைத்துச் செல்லலாம் என்றுதான் அவசரமாக வரச் சொன்னேன்.''

தியாகவல்லியின் கண்கள், முதற்சங்கமாய் மலர்ந்து, இரண்டாம் சங்கமாய் மணத்து, மூன்றும் சங்கமாய் மகிழ்கின்றன.

திருமேனி, தியாகவல்லியிடம் எதையோ தேடுவது போல நோக்குகிறாள். மனக்குகை யில் பல நாட்களாக ஓர் ஆவி, பேய்போல உலவி, அரற்றிக் கொண்டு வருகிற விஷ யத்தை அன்று பார்த்து, அந்தத் தனிமை நோக்கிக் கேட்க முனைந்தாள்.

''தியாகவல்லி! உன்னை ஒன்று கேட் பேன். உண்மையாக — தமிழ்ச்சங்கத்தை மிதிக்கப் போகிறோம் என்கிற சத்திய உணர்வுடன் மறுமொழி கூறுவாயா?''

''கூறுகிறேன் இளவரசி!''

''தமிழ்மேல் ஆணையாக...''

மனத்துள் சற்றே தயக்கம்,

அண்ணனைப் பற்றி எதுவும் கேட்டுவிடக் கூடாதே!

''கேள்வி யாரைப் பற்றியது இளவரசி?''

''வேங்கைமார்பனைப் பற்றியது.''

ஓ... சந்தர்ப்பமே வாழி...

''தமிழ்மேல் ஆணை! கேளுங்கள்...''

திருமேனி, கேட்க வேண்டியதுதானே?

ஏன் தயக்கம்?

தயக்கம்...

தயக்கம்...

''என்ன இளவரசி?''

திருமேனியின் தோகையனைய இமைகள் படபடக்கின்றன.

கேட்கப் போகிற கேள்வியின் வெப்பத்தை யுணர்ந்து அதனை ஆற்ற விசிறுகின்றனவோ?

துணிவை வரவழைத்துக் கொண்டு கேட்டாள் திருமேனி.

''தியாகவல்லி! முதல் நாள் சந்திப்பின் போது, உனது அண்ணன் ஓர் அருமையை வெளிப்படுத்தினார். அது: கானப்பேர் வேந்தன் 'வேங்கைமார்பன், உன் மீது தாகம் நிறைந்த மோகம் கொண்டதாக வும், தவிப்பு நீங்கச் சல்லாபித்ததாகவும் கூறிய செய்தி! இது எவ்வளவு தூரத்துக்கு உண்மை தியாகவல்லி? உன் மீது வேங்கை

மூன்றாவது கண்

பிரபல ஆங்கில எழுத்தாளர் ஆல்டஸ் ஹக்ஸ்லிக்குக் கண்பார்வை சற்று மங்கத் தொடங்கியதும் ப்ரெய்ல் முறையில் படிக்கும் முறையைக் கற்றுக் கொண்டார். ஹக்ஸ்லி கூறி னார்: ''இதனால் கண்களுக்கு நிறைய ஓய்வு கொடுக்க முடிகிறது. அது மட்டு மல்ல, இரவில் படுக்கப்போகும்போது போர்வைக்கு அடியில் ஒரு புத்த கத்தை வைத்துக் கொண்டு யாருக்கும் தொந்தரவின்றிப் படித்துக் கொண் டிருக்கலாமே!''

—எம். சிவசுப்ரமணியன்.



மார்பனுக்குக் காதல் உண்டு என்கிற செய்தி, வைகைக் கரை விழாவின் முதலைச் சம்பவத்துக்குப் பிறகு பரிபூரணமாக அவர் சொல்லியே உணர்ந்து கொண்டேன். ஆனால், உன்னைச் சல்லாபித்து என்னைப் பார்க்கத் தூது வருவது எந்த விதத்தில் நியாயம்? நாகரிகம்? திருமணத்துக்குப் பிறகு டலர் -என்பது ஓர் அரசியல் திசைதிருப்பமாகும். இயல்பானதும் கூட! ஆனால், ஒரு பெண்ணைக் கெடுத்து இன்னொரு பெண்ணைப் பார்க்க வருவதாவது? இந்தப் பண்பாட்டிலா வேங்கைமார்பன் வளர்ந்து வருகிறார்? என்னைச் சகோதரி என்றழைத்துச் சம்பாதித்துக் கொண்ட வெறுப்பை விட இப்போது அவர் அதிகமாகவே பெற்றுக் கொண்டார். இந்த அநாகரிகம் எவ்வளவு தூரத்துக்கு உண்மை என்பது புரிபட வேண்டும். பாதிக்கப்பட்டவளே இருக்கிற போது, அந்த உண்மையைத் தெரிந்து கொள்ளலாமே என்றுதான்...''

''தெரிந்து ஆகப் போவது?''

கழிமுனையான கேள்வி; விழிமுனையில் நிறைகிறாள் திருமேனி. ஆயினும் தன்னைத் தேற்றி விடைசொன்னாள்:

''ஆகப்போவது ஒன்றுமில்லைதான். ஆனால் பூரணமாகத் தெரிந்து கொண்டால் எனது முயற்சி பரிபூரணமாக மேற்கொள்ளும்.''

''என்ன முயற்சி?''

''இப்படி ஓர் அபலையா நீ என்று எனதுள்ளம் அனுதாபம் கொள்ளும். உன்னையே காணப்போர் அரியணையில் அமர்த்த சங்கல்பம் கொள்ளும். 'சகோதரி' என்று என்னை அழைத்துப் பாதியளவுக்கு நான் பாதிக்கப்பட்டாலும், இப்போது முழு அளவுக்குப் பாதிப்பு கண்டு, உனது வாழ்வை எனது வாழ்வாக மேற்கொள்ளுவேன்! எந்த அண்ணனும், தங்கை கெட்டாலும் அதனைத் தனது வாயால் சொல்ல மாட்டான். பகைமையின் தாக்கத்தால் கண்ட வெறி நிலையில் பொய்யும் சொல்லி இருக்கலாம்; உண்மையாகவுமிருக்கலாம். அதனை உனது வாய்மூலம் ஒரு வாக்குமூலமாகக் கேட்டு விடலாமே என்றுதான்! அதனால்தான் பெண்ணுருவில் போற்றும் நமது தமிழுருவின் ஆணை கேட்டேன். உண்மையைச் சொல் தியாகவல்லி!''

அடுத்தகணம்...:

தியாகவல்லியோ, உணர்வு வயப்பட்டு, உந்தலின் மூலக்கனல் இதயத்திலிருந்து வெளிப்பட்டு, தன்னை மறந்து தன்னிலை மறந்து, தனது அண்ணையையே மறந்து, உண்மைக்கு உடல்கிடையாது, உடைகிடையாது, உயிர் ஒன்றே என்பது போலக் கலகலவென்று நகைக்கிறாள்.

''ஏனிந்த நகைப்பு தியாகவல்லி?''

''இளவரசி! வேங்கைமார்பன், நாகரிகத்தின் நாயகன்! தமிழ்ப் பண்பாட்டின் தலைவன்! பெண்ணுக்கு இலக்கணம் எழுதும் பெருங்காப்பியன்!''

மெய்ப்புளகத் துடிப்பால் மேனிசிலிர்க்க, பொய்க்களத்தைப் போக்கும் பொறி பறக்கும் சொற்களால், தனது வேங்கைமார்பனுக்குச் சூழ்நிலை மறந்து நிவேதித்து விட்டாள் தியாகவல்லி.

அடுத்தகணம்...

தன்னையுணர்ந்து நாவைக் கடித்துக் கொண்டாள். தமிழ் மீது ஆணையிட்டதால் தன்னை மறந்த பேருணர்வோ?

ஆனால், வேங்கைமார்பனை, இழித்தும், பழித்தும், கழித்தும் பேசிவிட்ட திருமேனி...

தியாகவல்லியின் திறந்த இதயம்கண்டு, விழித்து, விதிர்த்து, பின் வியர்த்துப் போனாள்.

''உன் அண்ணன்காளிங்கன் சொன்னது?''

''பொய், பொய், பொய்!''

அதே முகவிகாரம்...

அதே உள்ளுணர்வு...

அதே ஆவேசக் குரல்...

அன்று வேங்கைமார்பன் தனது காதலை எவ்வளவு எடுத்துக் கூறியும் கேளாது திருமேனி சிலிர்த்தெழுந்த காட்சி...,

இத்தனை உணர்ச்சிப் பிழம்பாகப் பொய், பொய், பொய், என்று கூறிய தியாகவல்லி, அடுத்தகணமே உச்சத்தின் எதிர்நிலை கண்டு 'கோ'வென்று அழத் தொடங்கி விட்டாள்!

ஏனிப்படி இவள் அழவேண்டும்?

அவளது அந்த அழுகையை எங்கோ தொலைவிலிருந்து கவனித்த கண்கள் களிலும் பனித்துளிகள் அரும்பின.

(தொடரும்)





# அக்கினிக் கோடுகள்

விமலா ரமணி



சருளி அந்த ரயில்வே தண்டவாளத்தில் நடந்து கொண்டிருந்தான்.

'கருகும்' மென்ற இருட்டு.

பக்கத்திலேயே தான் சுடுகாடு! பிணம் ஒன்று எரிந்து கொண்டிருந்தது.

தூர்வாடை! பாவம் யாரோ... எவரோ?

துணையாக வந்த கூட்டம் புலம்பிவிட்டுப் போயிருக்கும்.

இப்போது வெட்டியானின் 'துணை'யுடன் அந்தப் 'பிணம்' எரிந்து கொண்டிருந்தது.

இரவு வண்டுகளின் ஓசை காதைத் துளைத்தது.

முணுக் முணுக்கென்று அவ்வப்போது மின்னிய நக்ஷத்திரங்கள் சில, மேகங்களின் போர்வைக்குள் பதுங்கிக் கொண்டு எட்டி எட்டிப் பார்த்து விளையாடிக் கொண்டிருந்தன.

மூன் நிலா கொஞ்சம் வெளிச்சம் போட்டுக் கொண்டிருந்தது.

கருளி எதையும் லட்சியம் பண்ணுமல் நடந்து கொண்டிருந்தான்.

அவனுக்கு இது சகஜம். இரவு ஷிப்ட் முடிந்து வீடு திரும்பும்போது இந்த வழிதான் குறுக்கு வழி என்று இப்படி வருகிற பழக்கம் அவனுக்கு உண்டு!

திடீரென்று அவன் கண்கள் எதையோ பார்த்தன.

அதென்ன... அதென்ன?

ரயில்வே தண்டவாளத்தில் யாரோ ஃபிஷ் பிளேட்டுகளைக் கழற்றிப் போட்டிருக்கிறார்கள்.

தண்டவாளம் இடைவெளியுடன் 'ஆ' வென்று பயங்கரமாய்த் தெரிந்தது!

கடவுளே... இப்போது மெயில் வருகிற நேரமில்லே!

ஆமாம்... இரவு ஷிப்ட் முடிந்து இவன் வரும்போதுதானே மெயில் வழக்கமாய் இவனுக்கு 'டாடா' சொல்லிவிட்டுப் போகும்!

ஒரு நிமிடம் வண்டி வரப் போவதையும் நடக்கப்போவதையும் மனக்கண்ணில் கற்பனை செய்துபார்த்தான் கருளி! ஃபிஷ் ப்ளேட்டுகள் அகற்றப்பட்ட தண்டவாளத்தில் ரயில் போக... தடதடவென்று அத்தனை பெட்டிகளும் சரிய... அழு குரல் ஒலிகள்... கதறல் ஓசைகள்... இரத்த வெள்ளம்... சிதைந்த பிணங்கள்... உயிருடன் புதையுண்ட மனிதர்கள்... அருகிலேயே சுடுகாடு! ரொம்ப தூரம் அலைய வேண்டாம்!

ஒரு நிமிடத்தில் தான் என்ன செய்ய வேண்டும் என்பதைத் தீர்மானித்தான் கருளி. போட்டுக் கொண்டிருந்த தன் சட்டையை, வியர்வையில் நனைந்த தன் சட்டையைக் கழற்றினுன் கருளி.

நட்ட நடு தண்டவாளத்தில் ரயில் வரும் திசையை நோக்கிச் சட்டையை ஆட்டியபடியே ஓடினுன்...

---

1969—ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 27—ம் நாள் கென்னடி முனையில் அப்போலோ—9 விண்வெளிக் கலம் புறபடத் தயாராகிக் கொண்டிருக்கிறது. ஏற்பாடுகளெல்லாம் ஏக தடபுடலாக நடந்து கொண்டிருக்கின்றன. அத்தனை ஏற்பாடுகளையும் நிறுத்தி வைக்கும்படி திடீரென்று உத்தரவு பிறப்பிக்கப்படுகிறது. காரணம்? அப்போலோ 9 விண்வெளிக் கலத்தில் பயணம் செய்ய இருந்த மூன்று விண்வெளி வீரர்களுக்கும் ஜலதோஷம் பிடித்துக் கொண்டதுதான்!

இதனுல் அமெரிக்க விண்வெளி ஆராய்ச்சி நிறுவனத்திற்கு ஏற்பட்ட நஷ்டம் ரூபாய் 50 லட்சம். மனித வரலாற்றிலேயே அதிக செலவு ஏற்படுத்திய ஜலதோஷம் இதுதான்!

—ராஜேஸ்வரி.



மூச்சைப் பிடித்துக் கொண்டு வேகமாக ஓடினான்...

மிக வேகமாக வந்த மெயில், சற்று நிதானித்து... மெதுவாய் வந்து, பிறகு ஊர்ந்து... பிறகு மூச்சுவிட்டபடி கருளியை இடித்துக் கொண்டு நின்றது! நல்லவேளை... இன்னும் பத்தடி தூரம் வந்திருந்தால் கதையே வேறு! அனைவரும் கருளியைப் பாராட்டினர்...

அவசரம் அவசரமாக அங்கேயே அனைவரிடமும் கொஞ்சம் கொஞ்சமாகப் பணம் வசூல் பண்ணி...

கருளிக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை...!

ஒன்றல்ல இரண்டல்ல... ஐந்நூறுரூபாய்!

மகள் பூவாயி 'பெரியவள்' ஆகியும் சீர் செய்யப் பணமில்லாமல் பேசாமல் இருந்து விட்டான் கருளி...

இப்போது... இப்போது... ஐந்நூறு ரூபாய் கிடைத்திருக்கிறது!

சீர் செய்து விட வேண்டியதுதான்.... உடனே... உடனே...

ரயில் 'கூ'வென்று கூவி விடை கொடுத்த போது கூட கருளி கற்பனையில் தான் மூழ்கியிருந்தான்.



''நேசமாவா?'' — என்றான் கன்னியப்பன். பீடியைக் கடைசி 'தம்' இழுத்துத் தூக்கி எறிந்தவன்... ஆச்சரியத்துடன் பூவாவிடம் கேட்டான்.

''மெய்யாலுமேதான் சொல்றேன். ஐயாவுக்கு ஐந்நூறு ரூபாய் இனாமாக் கிடைச்சதுங்காட்டியும் தான் எனக்கு சீர் எடுத்தாரு. இதோப்பாரு, இப்பவே சொல்லிட்டேன், என்னைப் பொண் கேட்டு ரொம்ப பேர் வராக... நீ சீக்கிரம் எனக்குப் பரிசம் போட்டுடு. ஆமாம்... இல்லாட்டி நான் உனக்குக் கிடைக்க மாட்டேன்...''

''அட சரிதான் புள்ளே... ரொம்பத்தான் பிகு பண்ணிக்காதே... இப்படி பக்கத்துலே வாயேன்...''

''அதெல்லாம் அப்புறமேதான்! இப்ப இது தான்...'' —. என்றவள் அவன் கையில் தன் உதட்டைப் பதித்துவிட்டு ஓடிவிட்டாள்.

அவள் குடம் தூக்கிச்சென்ற ஒற்றையடிப் பாதையையே வெறித்துப் பார்த்தான் கன்னியப்பன்.

ஆற்றில் வெள்ளம் வந்துவிட்டது.

இக்கரைக்கும், அக்கரைக்குமாகக் குழந்தைகளும், பெரியவர்களும் கும்மாளம் போட்டபடி, பந்தயம் சட்டியபடி நீந்திக்கொண்டிருந்தனர்.

கன்னியப்பன் கூட இப்படிப் பந்தயம் கட்டிப் பத்து இருபது கெலித்திருக்கிறான்!

ஆ... யாருக்கு வேணும் இந்தச் சுண்டைக் காய்ப் பணம்...

ஒன்றல்ல இரண்டல்ல ஐந்நூறு ரூபாய். ஒரே சமயத்தில் இப்படிக் கிடைக்குமா?

கன்னியப்பன் யோசிக்க ஆரம்பித்தான்!

இப்படி வாழ்வில் படிப்பும் இல்லாமல், பிடிப்பும் இல்லாமல் எத்தனை நாள் வாழ்வது? டெண்ட் கொட்டாயில் புகழ்பெற்ற நடிகர்களின் 'பயாஸ்கோப்' பார்த்து விசில் அடித்துக் கொண்டு, அவ்வப்போது அவர்களுக்கு ரசிகர் மன்றம் அமைக்கும் தலைவர்களுக்கு அடியாளாக இருந்து கொண்டு, 'க்யூ'வில் நின்று டிக்கெட் வாங்கி, அவர்கள் அன்பு நடிகர் நடிக்கும் படத்தின் முதல் நாளன்று வரும் ரசிகப் பெருமக்களுக்குப் 'பிரசாதம்' வழங்கி, ஸ்டண்ட் காட்சிகளில் விசில் அடித்து, கைதட்டி... அந்தக் கிராமத்து நோட்டை மைக்கில் ரசிகப் பெருமக்களுக்கு வணக்கமும், வரவேற்பும் சொல்லி, அவ்வப்போது 'கட்சிமாறி' எதிர்க்கட்சிக்கும் பிரசாரம் செய்து... சீ... இந்த வாழ்வு எத்தனை நாளைக்கு... சில இரவுகள் போஸ்டர் கூட விடிய விடிய ஒட்டிய அனுபவமும் இவனுக்கு உண்டு... கரித் துண்டில் தப்புத் தப்பாக ரசிகர் மன்றத்தின் பெயர்களை எழுதியதில் இவனுக்கும் பங்கு உண்டு!

டிப்டாப்பாக வாடகை டிரஸ் போட்டுக் கொண்டு வீட்டில் வயதான ஆயாவை வேண்டுமென்றால் ஏமாற்றலாம்... அவள் கிழவி... இவன் பசப்பில் ஏமாந்துவிடுவாள். இவன் அழகைக் காட்டி பூவாயியை வேண்டுமானால் ஏமாற்றலாம். அவளிடம் வெளியூரில் பெரிய வேலை என்று பொய் சொல்லலாம். அவள் குமரி! இவன் சாதவில் ஏமாறுவாள்! இவன் வெளியூருக்குப் போய்ப் போஸ்டர் ஒட்டுவது அவளுக்குத் தெரியவா போகிறது!

ஆனால் அவள் அப்பனை இப்படி ஏமாற்ற முடியுமா?

என்ன வேலை, ஏது வேலை என்று கேட்டால் என்ன பதில் சொல்வது?

வெறும் கையில் பரிசம் போட முடியுமா? இவனால் வெறும் கையில் முழம் கூடப் போட முடியாது!

இவன் எதிர்காலத்தில் 'பெரிய ஆளாகப்' போகிறான் என்கிற நம்பிக்கையை அச்சாரமாகத் தந்து பூவாயியை மணக்க முடியுமா என்ன?

அவள் அப்பா கன்னத்தில் அச்சாரம் தந்து விட்டால் என்ன செய்வது? கன்னியப்பன் யோசித்தான்!

அன்று—

அமாவாசை இரவு.

கன்னியப்பன் அந்தத் தண்டவாளத்தின் பாதையில் நடந்து கொண்டிருந்தான். இந்த வழியாகத்தான் மெயில்வரும்!

இன்னும் ஒரு மணி நேரத்தில் மெயில் வருவதற்குள் இவனுக்கு நிறைய வேலைகள் பாக்கி இருக்கின்றன...

---

முல்லா நாகருதீன் ஒரு மசாஜ் நிலையத்திற்குப் போனார். முல்லாவின் கோமாளித் தோற்றத்தைப் பார்த்துவிட்டு மிகவும் அலட்சியமாக மசாஜ் செய்தான் அங்கிருந்த வேலையாள். மசாஜ் முடிந்ததும் வேலையாளுக்குப் பத்து பவுனை டிப்ஸ் கொடுத்தார் முல்லா. இதை எதிர்பார்க்காத அவன் மிகவும் ஆச்சரியப்பட்டுப் போனான்.

மறுநாள் அதே இடத்திற்கு முல்லா வந்தார். இந்தமுறைஇன்னும் நன்றாக மசாஜ் செய்தால், முல்லா இன்னும் நிறைய பவுன் கொடுப்பார் என்றெண்ணிய அந்த வேலையாள் முல்லாவை நன்றாகக் கவனித்துக் கொண்டான். மசாஜ் முடிந்ததும் ஒரு அரைப்பவுன் நாணயத்தை மட்டும் கொடுத்துவிட்டு, ''அப்பனே! நான் நேற்று கொடுத்த பணம் இன்று நீ செய்த மசாஜுக்கு! இப்போது கொடுக்கிற பணம் நேற்று செய்தாய் பார், அதற்கு!'' என்றபடியே நடக்கத் தொடங்கினார்.

—ஏ. கே. நாசர்.




"மகா பர்வி! ஏதோ நகைகளைத்தான் கேக்கப் போறே தொலைஞ்சு போட்டோம்னு பாத்தா ராகமாலிகா புடவையை குடுக்க சொல்றியே நீ நல்லா இருப்பயா!"

# அட்மிஷன் அனுபவம்

**(எல்லா வாசகர்களும்கலந்து கொள்ளலாம்; பெண்களுக்காக மட்டுமல்ல)**



**போட்டி 9 : அட்மிஷன் அனுபவம்**

உங்கள் குழந்தையைப் பள்ளியில் சேர்க்க இந்த ஆண்டு இல்லாவிடினும் முன்னெப்போதாவது படாதபாடு பட்டிருப்பீர்களே! ரசமான அனுபவத்தைச் சுருக்கமாகக் கீழே எழுதி இந்த அரைப் பக்கத்தை மட்டும் கத்தரித்து அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு உண்டு. தவிர ஒருவருக்குப் பட்டுப் புடவை பரிசு குலுக்கல் முறையில். உறையின் மீது 'அட்மிஷன் அனுபவம்' என்று குறிப்பிடவும்.

முடிவு தேதி: 16.7.84.

**இன்னும் 44 புடவைகளே பாக்கியுள்ளன! அவற்றில் ஒன்றைப் பெற வாரா வாரம் போட்டிகளில் பங்கு பெறவும்!**

என். பெயர் : ..............................

விலாசம் : ..............................

..............................

ஃபிஷ் பிளேட்டுகளை அகற்ற வேண்டும். அப்புறம் ரயில் வரும் திக்கை நோக்கி ஷர்ட்டை வீசியபடி ஓட வேண்டும்... ரயிலை நிறுத்தி விபத்தைத் தடுக்க வேண்டும்! (அதாவது நடிக்க வேண்டும்!)

தங்கள் உயிரைக் காப்பாற்றிய கன்னியப்பனுக்கு அனைவரும் பரிசும், பணமும், பாராட்டும் தருவார்கள்.

டார்ச் விளக்கின் வெளிச்சத்தில் மெல்ல... மெல்ல ஒவ்வொரு ஸ்க்ருவாகக் கழற்ற ஆரம்பித்தான்...

மின்னல் வெட்டியது...

தேசப்படத்தின் நதிகள் கோடுகள் மாதிரி அக்கினிக் கோடுகள் ஆகாயத்தில் இங்குமங்கும் பளிச்சிட்டன! சே! என்ன இது இப்படி திடீரென்று?

மழை தூற ஆரம்பித்தது!

''சனியன் பிடிச்ச மழை!''

தனக்குள் முணுமுணுத்துக் கொண்ட கன்னியப்பன் தன் வேலையில் மும்முரமாக இருந்தான். அந்த மழையிலும் பக்கத்துச் சுடுகாட்டில் பிணம் ஒன்று எரிந்து கொண்டிருந்தது. அவ்வப்போது தண்ணீர்த் துளிகள் அதன் மேலே தெறிக்க, படபடத்து இன்னும் கோபமாக எரிந்தது! யாரோ குளிரக் குளிரப் போயிருக்கிறார்கள்... பாவம்!

கன்னியப்பன் ஸ்குரூக்களைக் கழற்றினான்...

ஒன்று... இரண்டு...

மழை நன்றாகப்பலக்க ஆரம்பித்துவிட்டது.

சே... நான் தேர்ந்தெடுத்த நாள் சரியில்லை!

கன்னியப்பன் சலித்துக் கொண்டான்.

மழையில் நனைந்த டார்ச் எரிய மறுத்தது.

இருட்டும் சுடுகாட்டு வீச்சமும் கன்னியப்பனைப் பயமுறுத்தின...

கழற்றி ஆயிற்று... இனி... இனி... மெயிலுக்குக் காத்திருக்க வேண்டியதுதான். கன்னியப்பன் அந்தப் பாதையில் சொட்டச் சொட்ட நனைந்தபடி புதரின் மறைவில்... காத்திருந்தான்... காத்திருந்தான்... காத்திருந்தான்...

மெல்ல விடிய ஆரம்பித்தது.

பறவைகளின் குரலும்... மனிதர்கள் ஆரவாரமும்...

இனி காத்திருப்பதில் அர்த்தமில்லை! மெயில் வரவே இல்லை! ஏன்?

ஒருவேளை முதலிலேயே போயிருக்குமோ? சீ... சீ... இவன் தான் மணியைச் சரியாகக் கணக்கிட்டுக் கொண்டிருந்தானே...

விறைக்கின்ற குளிரில் உடம்பு வெட வெடக்க மெல்ல வீடு நோக்கி நடக்க... ஆரம்பித்தான்...

மழை விட்டிருந்தது... கிராமத்துப் பெட்டிக் கடை சுறுசுறுப்பாக இயங்க ஆரம்பித்திருந்தது.

ஒரு காப்பி சூடாகக் குடித்தால் கொஞ்சம் தெம்பாக இருக்கும்...

கன்னியப்பன் பெட்டிக் கடை வாசலில் காப்பிக்காகக் காத்திருந்தான்...

''சமாசாரம் தெரியுமில்லே? ராத்திரி மெயில் தடம் புரண்டு...'' யாரோ இருவர் பேசிக் கொண்டிருந்தனர்.

கன்னியப்பன் உஷாரானான்.

ராத்திரி மெயில் தடம் புரண்டு விட்டதா? எங்கு... எங்கு?

மனம் வேகமாக அடித்துக் கொள்ள இவன் அவர்கள் பேச்சைக் கேட்டான்.

இரவு திடீரென்று பெய்த மழையினால் தண்டவாளம் அடித்துச் செல்லப்பட்டு மெயில் தடம் புரண்டு விட்டதாம்.... நல்ல வேளை... ரயில் மெதுவாக ஊர்ந்து வந்ததால் மக்களுக்குச் சேதமில்லை:... உயிர் பலி இல்லையாம்!

ரயில் பக்கத்து ஜங்ஷனுக்கு அருகிலேயே நின்று விட்டதாம்!

அட கடவுளே... இது தெரியாமல் இவன் இங்கேயும் தண்டவாளத்தைப் பெயர்த்து வைத்து இன்னொரு விபத்துக்காகக் காத்திருந்தானே! பைத்தியக்காரன்!

''அட, கன்னியப்பனு... இங்கேயா குந்திட்டு இருக்கே...? ஓடு... ஓடு... ராவு பேஞ்ச மழையிலே உன் வூடு உளுந்து உன்னோட, ஆயா அடிபட்டுத் துடிச்சிட்டுக் கிடக்குறாங்க...''

அட கடவுளே... இவன் இங்கு தண்டவாளத்தைப் பெயர்க்கும் வேளையில் இவன் வீடே பெயர்ந்து விழுந்து விட்டதா?

''ஆயா...'' — என்று கதறியபடி, ஆர்டர் கொடுத்த காப்பியையும் மறந்து கன்னியப்பன் பைத்தியக்காரன் மாதிரி வீட்டை நோக்கி ஓடுகிறான்.

அங்கே...?

இவன் வீடு தரை மட்டமாக இடிந்து கிடக்க, பிரிந்த கூரையும், குட்டிச்சுவருமாக வீடு இருந்த இடம் தெரியாமல் நிற்க... வீட்டின் பொருட்கள் எல்லாம் தாறுமாறாய்ச் சிதைந்து கிடக்க... இவனை வளர்த்து ஆளாக்கிய இவன் ஆயா... அதோ... அதோ... அங்கே... தரையில் ஆகாயத்தைப் பார்த்தபடி கிடக்க...

பூவாயி கண்களில் கண்ணீருடன் இவனை எதிர் கொண்டழைக்க...

அங்கே இவன் ஆயாவிற்கு இறுதி ஊர்வல ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன!

பரிசம் போடக் கன்னியப்பன் வருவான் என்று பூவாயி காத்திருந்தாள். ஆனால் இப்போது கன்னியப்பன் வந்தது பரிசம் போட அல்ல! வாய்க்கரிசி போட! சுடுகாடு அருகில்தான் இருக்கிறது!

கன்னியப்பன் தண்டவாளத்தைப் பெயர்த்த இடத்திற்குப் பக்கத்தில்தான் இருக்கிறது.

அந்தக் கடைசிப் பாதையில் நடக்கும் போது...?

சுடுகாட்டில் கால் வைப்பதற்கு முன், கழற்றிப் போட்ட தண்டவாளத்தில் ஸ்குருக்களைத் திரும்பப் போட வேண்டும்.

உழைத்துச் சம்பாதித்துப் பூவாயிக்குப் பரிசம் போட வேண்டும்! இவனுள்ளும் சில அக்னிக்கோடுகள் வெளிச்சம் போடுகின்றன!

அதற்கு முன் இப்போது... இப்போது....

கன்னியப்பன் அழ வேண்டும்... நிறைய அழ வேண்டும்... நிஜமாக அழ வேண்டும்... கன்னியப்பன் இரைந்து அழ ஆரம்பிக்கிறான்?

# மூலக் கனல்

**நா. பார்த்தசாரதி**

## அத்தியாயம் 12

திருமலையைப் போலவே இயக்கத்தில் ஈடுபாடுள்ள தலைவர்கள், கலைஞர்கள், எழுத்தாளர்கள், எல்லோருமே நாடகங்களில் நடிப்பது, திரைப்படங்களுக்கு வசனம், பாடல்கள் எழுதுவது, வெடிப்புள்ள தமிழ் நடையில் இயக்கத்திற்கான ஏடுகள் நடத்துவது என்றெல்லாம் பல வழிகளில் முனைப்பாக இறங்கினர். காங்கிரஸாரின் மெத்தனம், அலட்சியப் போக்கு, தாய்மொழி உணர்ச்சி, இன உணர்ச்சி, பிரதேச உணர்ச்சி பற்றிக் கவலையே படாமல் அவற்றைப் புறக்கணித்த நிலை எல்லாமாகச் சேர்ந்து திருமலை வகையறுவுக்கு விறுவிறுவென்று முன்னேறும் வாய்ப்புக்களை அளித்தன. அவர்கள் மொழி உணர்வே அற்றிருந்தார்கள் என்றால், இவர்கள் மொழி உணர்வே சகலமும் என்றார்கள். எழிலிருப்பில் மாவட்ட, மாநாடு முடிந்து உடையாரால் ஏ. சி. ரூமிலிருந்து வெளியேற்றப்பட்டு அவமானத்தோடும், ஆத்திரத்தோடும் சென்னை திரும்பிய திருமலை சில நாட்களில் 'திராவிட முழக்கம்' என்றொரு பத்திரிகைக்குத் தன்னை ஆசிரியராகவும் வெளியிடுபவனாகவும் சீஃப் பிரசிடென்சி மாஜிஸ்திரேட் முன்பு பதிவு செய்து கொண்டான். அந்தக் கால கட்டத்தில் இப்படி வேறுபல ஏடுகளும் வெளிவரத் தொடங்கின. சினிமா வேலைகளோடு பத்திரிகை வேலைகளும் சேர்ந்து கொண்டன. இயக்கத்திற்கென்று இரண்டு மூன்று தினசரி ஏடுகளும் ஏற்பட்டிருந்தன. ஆங்கில மொழி ஏடுகளும், பிரபலமான பிரதேச மொழித் தினசரிகளும் உள்ளூர்ச் செய்திகளைப் புறக்க



ளித்தபோது திராவிட இயக்கத் தினசரிகள் உள்ளூர் மொழி இனச் செய்திகளுக்கு முக்கியத்துவம் அளித்துக் கவர்ச்சி பெற ஆரம்பித்தன. மற்றவர்களை விட வீச்சு நிறைந்த போர்க் குணமுள்ள துள்ளு தமிழ் நடை வேறு இவர்களைத் தனித்தன்மையுள்ளவர்களாக மக்களிடையே எடுத்துக் காட்டியது. திராவிட முழக்கமும் அப்படி நடைக்குப் பேர் பெற்றிருந்தது. அதில் 'அதிரடி' என்ற பகுதியைத் 'திரு' என்ற பெயரில் அவன் எழுதி வந்தான். முதல் இதழின் முதல் 'அதிரடி'யில் எழிலிருப்பு மாஜி ராஜாவின் ஏர்க்கண்டிஷன் சோஷலிஸம்'— என்ற தலைப்பில் கிருஷ்ணராஜனைப் பிடிபிடி என்று பிடித்திருந்தான். இயக்கத் தொண்டர்கள் மத்தியில் 'அதிரடி' பகுதி மிகவும் விரைவிலேயே பிரபலமாகி விட்டது. பெரியவர்கள், சிறியவர்கள் என்று பாராமல் இயக்கத்துக்கு எதிரான எல்லோரையும் தாக்கினான் அவன். ஆட்சியிலிருந்த காங்கிரஸ் மந்திரிகள்தான் அவனது முதல் இலக்காயிருந்தவர். அவர்களே விமர்சனத்துக்காளாயினர்.

1957—ஆம் ஆண்டில் நடைபெற்ற திருச்சிராப்பள்ளி மாநில மகாநாட்டில் இயக்கப் போக்கில் சில மாறுதல்கள் தென்பட்டன. ஒரு குறிப்பிட்ட இனத்தை மட்டும் எதிர்ப்பது தங்கள் நோக்கமில்லை என்றும், அந்த இனத்தின் தன்மைகளையே தாங்கள் எதிர்ப்பதாகவும் தீர்மானம் நிறைவேறியது. இயக்கம் தேர்தல்களில் ஈடுபட வேண்டும் என்ற கருத்து வலுப்பெற்றது.



தன்னுடைய ஜன்ம வைரி என்ற முறையிலும், காங்கிரஸ் அமைச்சரவையில் ஓர் ஆள் என்ற முறையிலும் சின்னக் கிருஷ்ணராஜனைத் திருமலை விடாமல் தாக்கி எழுதியும் அவன் பதிலுக்கு எதுவும் செய்யவில்லை. ஆனால் எல்லோருமே அப்படிப் பொறுத் தன்மையாயிருந்தார்கள் என்று சொல்லிவிட முடியாது. எதிர் முனையிலும் காரசாரமான அரசியல் ஏடுகள் தோன்றியிருந்தன. அவனையும் அவன் இயக்கத்தைச் சேர்ந்தவர்களையும் சாடு சாடென்று பதிலுக்குச் சாடின. அகப்பட்டால் அவமானப்படுத்துவதற்குக் கூடக் காத்திருந்தன. ஆட்சியிலிருந்தவர்களின் ஒழுக்கம் சம்பந்தமான விமர்சனங்களை அவர்கள் செய்த போது தாங்கள் கண்ணாடி மாளிகையிலிருந்து கல் லெறிகிறோம் என்பதை அவர்கள் உணரவில்லை.

திருமலை ஒரு தடவை வகையாக மாட்டிக் கொண்டான். மதுவிலக்கு அமுலிலிருந்த காலம். ஓர் ஊரில் மாநாட்டிற்குப் பின் இயக்க நாடகம் நடத்தி விட்டு, அவன் டி. பி. யில் தங்கியிருந்தான். அலைச்சலும் உடல் அசதியும், களைப்பும் மிகுதியாயிருந்தன. வேண்டிய ஆள் ஒருத்தன் வெளிநாட்டுப் பாட்டில் ஒன்றிற்கு ஏற்பாடு செய்து கொடுத்தான். அந்த ஊர் எழில்ருப்பு வட்டாரத்தைச் சேர்ந்ததுதான். இரவு ஒன்றரை மணிக்கு மேல் அவன் நல்ல குடிவெறியில் நாடகக் குழுவைச் சேர்ந்த எக்ஸ்ட்ரா நடிகை ஒருத்தியுடன் ஒரே அறையில் மகிழ்ச்சியாயிருந்தபோது போலீஸ் ரெய்டு என்று வந்து அறைக் கதவைத் தட்டியது. அவனுக்கோ சுய நினைவே இல்லை. எப். ஐ. ஆர். தயாரிக்க அவனையும், உடனிருந்த பெண்ணையும் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்ல முன்வந்த கான்ஸ்டபிளைக் குடிவெறியில் ஓங்கி அறைந்து விட்டான் திருமலை. அவன் அடிதடியில் இறங்கவே விஷயம் மிகவும் பெரிதாகி விட்டது. திருமலையின் உதவியாளரும் நாடகக்குழு நிர்வாகியுமாக இருந்த கண்ணையா என்பவன் போலீஸாரைத் தன்னைக் கட்டிச் சரிசெய்து அனுப்ப ஏற்பாடு செய்து கொண்டிருந்த சமயத்தில் திருமலை இப்படி நேரடி நடவடிக்கையில் இறங்கவே தர்ம சங்கடமாகி விட்டது. அந்தச் சமயத்தில் மந்திரி கிருஷ்ணராஜன் சுற்று வட்டாரத்து ஊர்களான தம் தொகுதியில் சுற்றுப் பயணம் செய்துவிட்டு எழிலிருப்புக்கே திரும்பி வருகிற தம் அசல் திட்டத்தைச் சிறிது மாற்றிக்கொண்டு நடு வழியில் இந்த டி. பி. யில் தங்குகிற எண்ணத்துடன் வந்திருந்தவர் இந்த விவரத்தை அறிய நேர்ந்தது. திருமலை அப்போ இருந்த நிலையில் சுய நினைவற்று இருந்தான். கான்ஸ்டேபிளை அறைந்து விட்டு மறுபடி படுக்கையில் படுத்து விட்டான் அவன். மந்திரி வந்திருப்பது பற்றி எல்லாம்



# கல்கி

அடுத்த வாரம்:

## ''வீட்டு வசதி வாரியம்'' என்பர் சிலர்
## ''வீட்டு (வ) சதி வாரியம்'' என்பர் பலர்
## உண்மை நிலை என்ன?

ஓர் ஆய்வு

---

அவனுக்குத் தெரியாது. போலீஸார் மது விலக்கு மீறல் பற்றி குற்றச் சாட்டுடன் இம்மாரல் டிராஃபிக் குற்றச்சாட்டையும் சுமத்தித் திருமலையைக் கைது செய்ய ஏற்பாடு பண்ணிக்கொண்டிருந்தனர். போலீஸாரைத் தாக்கிய குற்றம் வேறு சேர்ந்து கொண்டிருந்தது. நினைத்தபடி அவர்கள் திருமலையைக் குற்றம் சாட்டிக் கையும்களவுமாகக் கைது செய்திருந்தால் மறுநாள் காலை எல்லாப் பத்திரிகையிலும் அந்தச் செய்தி பெரிதுபடுத்தப்பட்டிருக்கும். குடித்து விட்டு ஒரு பெண்ணுடன் டி. பி. யில் விபச்சாரக் குற்றத்தில் ஈடுபட்டதாகவும், போலீஸ் கான்ஸ்டேபிளைத் தாக்கியதாகவும் செய்திகள் பிரசுரமாகியிருக்கும்.

தன் அரசியல் எதிரிதானே என்கிற நிலையில் மந்திரி கிருஷ்ணராஜன் அதைப் பார்த்து மகிழ்ந்திருக்க வேண்டும். ஆனால் மந்திரி அப்படி மகிழவில்லை. மிகமிகப் பெருந்தன்மையோடு நடந்து கொண்டார். அவர் பெருந்தன்மையோடு நடந்துகொண்டதற்குத் திருமலையின் நாடகக் குழு நிர்வாகியே கண்கண்ட சாட்சியாக அருகிலிருந்தான்.

''இந்தாப்பா! இதை ஒண்ணும் பெரிசு படுத்தாதீங்க. மனுஷன் குடிவெறியிலே ஏதோ தப்புப் பண்ணிட்டான். எஃப். ஐ. ஆரைக் கிழிச்சுப் போடுங்க... ஒண்ணுமே நடக்கலேன்னு நினைச்சு விட்டுடுங்க... நான் சர்க்கிள்கிட்டப் பேசிக்கறேன். வீணா ரசாபாசப்படுத்த வேணும்'' — என்று மந்திரி சொல்லியதையும் அதன்படி நடந்ததையும், தன் நினைவற்றிருந்த திருமலையைத் தவிர மற்ற அனைவரும் அறிந்திருந்தனர். மந்திரி விரோதங்களை நினைவிற்கொண்டு அவனைப் பழி வாங்காமல் பெருந்தன்மையாக மானத்தைக் காப்பாற்றியிருந்தார். மந்திரியே தலையிட்டதால் போலீஸார் மேற்கொண்டு அவளையோ அவன் ஆட்களையோ தொந்தரவு செய்யவில்லை. விட்டு விட்டுப் போய் விட்டார்கள்.

மறுநாள் பொழுது விடிந்ததும் கன்னையா இந்த விவரங்களை எல்லாம் திருமலையிடம் கூறி, ''மந்திரி வந்துதான் ரொம்பவும் பெருந்தன்மையா உங்களைக் காப்பாத்தினாரு! இல்லாட்டி ரசாபாசமாப் போயிருக்கும்''— என்றான். இதற்குத் திருமலை கூறிய பதில் கன்னையாவை மட்டுமில்லாமல் உடனிருந்த அனைவரையுமே அதிர்ச்சியடையச் செய்தது.

''நீ அடிக்கிற மாதிரி அடி! நான் வந்து காப்பாத்துற மாதிரிக் காப்பாத்திடறேன்னு மந்திரியே போலீஸாரைத் தூண்டிவிட்டு அனுப்பி வைத்து விட்டுப் பின்னடியே வந்திருப்பாரு'' — என்றான் திருமலை. தனது எதிரி பெருந்தன்மையாக நடந்து கொண்டிருக்க முடியும் என்பதை அவன் நம்பவோ ஒப்புக் கொள்ளவோ சிறிதும் தயாராயில்லை. உலகில் எல்லாமே வஞ்சம், சூது, சூழ்ச்சி ஆகிய அடிப்படைகளில்தான் திட்டமிடப்பட்டிருக்க முடியும் என்று அவன் நம்பினான். தன்னையும் தன்னைச் சுற்றியிருப்பவர்களையும் வைத்தே மற்றவர்களையும், மற்றவற்றையும் கணித்தான் அவன். தன் எதிரி நல்லவனாக இருக்க முடியாது கூடாது என்பது அவனது தீர்மானமான எண்ணமாயிருந்தது. ''உன் பட்டணத்துக்குப் போயி யாருக்கும் தெரியாமக் காதும் காதும் வச்சாப்பிலே அவருக்கு ஒரு வார்த்தை நன்றி சொல்லிட்டுப்போயிடலாங்க'' — என்று உதவியாளர் கன்னையா கூறிய யோசனையைத் திருமலை ஏற்கவில்லை.

''நீ சும்மாயிரு! உனக்கு இந்த உள்பட்டைத்துக்காரனுவளைப் பத்தித் தெரியாது. கடைஞ்செடுத்த அயோக்கியனுவ. சோழியன் குடுமி சும்மா ஆடாது. 'அதிரடி'யிலே விடாம இவனுகளைத் தாக்கி எழுதறேனில்லே. பேரம் பேசி அதை நான் எழுத விடாமப் பண்றதுக்கு இப்போ இப்படி அடிப் போடறாங்க—''

''அப்பிடித் தோணலீங்க... நிஜமாகவே நல்லெண்ணத்தோடேதான் பண்ணின மாதிரித் தோணுதுங்க... சமய சஞ்சீவி மாதிரி மினிஸ்டர் மட்டும் அந்த நேரத்

துக்கு வரல்லேன்னு... காலம்பரப் பேப்பருங்களிலே எல்லாம் தாறுமாறா நியூஸ் வந்திருக்கும்.''

''கன்னையா! நீ சும்மாயிரு. இது அரசியல். உனக்குப் புரியாது''— என்று ஒரே வாக்கியத்தில் அவன் வாயை அடைத்து விட்டான் திருமலை. 'அரசியல் வாதியாயிருந்தால் ஒரு சரியான விஷயத்தைக் கூடத் தவறாகத்தான் புரிந்து கொள்ள வேண்டும் போலிருக்கிறது' என்று எரிச்சலோடு தனக்குள் முணுமுணுத்தபடி சும்மாயிருந்துவிட்டான் கன்னையா. 'கெட்டாலும் மேன் மக்கள் மேன்மக்களே' என்ற பழைய பாட்டுத்தான் கன்னையாவுக்கு நினைவு வந்தது. ''எங்களுக்குள்ளார இருக்கிற விரோதம் ரொம்ப பெப்! உனக்குப் புரியாது கன்னையா! நான் உள்பட்டணத்திலே, அரண்மனைக்குள்ளே நுழைஞ்சாலே என்னைத் தீர்த்துக் கட்டிடுவாங்க'' — என்று திருமலை மறுபடியும் வற்புறுத்திச் சொன்னான். இறுதி வரை தனக்கும் ஜமீன் குடும்பத்துக்கும் கடுமையான விரோதம் இருப்பதாகப் பாவிப்பதையே அவன் விரும்பினான். அந்தப் பாவனை அவனுக்கு வேண்டியிருந்தது. அந்தப் பாவனையிலிருந்து சிறிது நெகிழ்ந்தோ இளகியோ, தணிந்தோ, போவது கூடப் பாவம் என்று அவன் எண்ணினான். விரோதத்தில் தான் அவன் வளர்ந்தான். விரோதத்தில்தான் அவனது அரசியல் சார்பு நிர்மாணமாயிற்று. விரோதத்தில்தான் அவனது பேச்சு, எழுத்து, வளர்ச்சி, புகழ் எல்லாமே இருந்தன. அந்த விரோதத்தை இன்னும் விட்டுவிட அவன் தயாராயில்லை.

விரைவில் அடுத்து வந்த பொதுத்தேர்தலில் சின்ன உடையாரை எதிர்த்து அவன் சட்டசபைக்குப் போட்டியிட வேண்டுமென்று கட்சி முடிவு செய்தது. முதல் முதலாகச் சட்டமன்றத் தேர்தலுக்கு நின்ற கட்சியின் முக்கியப் புள்ளிகளில் அவனும் ஒருவனாயிருந்தான். பரம்பரையும், செல்வாக்கும் உள்ள ஒரு பெரும் புள்ளியை எதிர்த்து அவன் வெல்ல முடியுமா என்ற பயமும் சந்தேகமும் பொது மக்களில் பலருக்கு இருந்தன. தேர்தலில் நிற்கும் போதே சின்னஉடையார் மந்திரியாயிருந்தார். பதவியின் உயரம்வேறு அவருக்கு இசைவாயிருந்தது. திருமலைமட்டும் பயப்படாமல் துணிந்து நின்றான். சின்ன உடையாரைப் பழி வாங்கும் வெறிநெருப்பு அவனுள் எப்போதும் போல் அணையாமல் கனன்று ஜ்வலித்துக் கொண்டிருந்தது.

(தொடரும்)

---

# தலைப்புச் செய்தி

''கிசுகிசு போட்டால்தான் பத்திரிகை அமோகமாக விற்கும். கொண்டு வா கிசுகிசுக்களை!'', என்று விரட்டுகிறார் பத்திரிகை ஆசிரியர்.

நிருபர் கணேஷ், 'கிசுகிசுக்களால் யாருக்கு என்ன பயன்? தரமான செய்திகள் அல்லவா மக்களுக்குத் தேவை?' என்று வாதிட்டாலும், சவாலாக ஒரு பரபரப்புச் செய்தி கொண்டு வர, சூப்பர்ஸ்டார் ஸ்யாம்சுந்தரின் ஓட்டல் அறைக்கு இரவு எட்டரைக்குச் செல்கிறான். அங்கே சூப்பர் ஸ்டாரின் கொலையுண்ட உடலைத்தான் காண முடிகிறது. முதன் முதலில் தலைப்புச் செய்தியாக அவன் தந்த 'ஸ்கூப்'பை மறுநாள் அவன் பத்திரிகை வெளியிட்டாலும், மற்ற பத்திரிகைகள் ஸ்யாம்சுந்தர் இரவு ஒன்பது மணிக்குக் குருடர் பள்ளி நிகழ்ச்சி ஒன்றில் கலந்து கொண்டிருக்கிறார்; அதற்குப் பிறகு தான் இறந்திருக்கிறார் என்று செய்தி வெளியிடும்போது — வருபவை: போலீஸ், சிக்கல்.

டெல்லி கணேஷுக்கு, கணேஷ், அவன் தம்பி சக்கரவர்த்தி ஆக இரட்டைப் பாத்திரங்கள். கணேஷ் மனைவியாக வரும் ஆனந்திக்குக் கொஞ்சம் சனியான ரோல். அலட்டிக் கொள்ளாத நடிப்பு.

கொலை செய்தவனின் நோக்கம் இன்னும் அழுத்தமாகச் சொல்லப்பட்டிருக்கலாம். கடைசியில் தம்பி சக்ரவர்த்தி, கொலையாளியை எப்படிக் கண்டுபிடித்தான் என்பதில் இன்னும் சற்றுத் தெளிவு இருக்கலாம். இடைவேளை வரை கொட்டகை முழுவதும் சிரிப்பதற்காக்வே நகைச்சுவை வெடிகளை உதிர்த்துத் தள்ளினாலும், நாடகாசிரியர் ரமணி, டெல்லி கணேஷுக்குத் தந்திருக்கும் 'தலைப்புச் செய்தி,' சபா நாடகங்களின் தரத்தில் இன்னொரு சுவாரசியமான நாடகம்.

—சாருகேசி









# யாருக்? தக்?



அன்னை தெரசாவுக்கு,

ஒரு விண்ணப்பம். புதுதில்லி கோல்ஃப் லிங்க்ஸில் உள்ள பிரோஸ் வருண் காந்தி என்ற பாலகனை நீங்கள் உங்கள் இல்லத்தில் வளர்த்தால் இந்தியாவின் ஒரு பெரிய தேசிய குடும்பத்தின் இளம் தளிரைக் காத்த புண்ணியம் தங்களுக்குக் கிட்டும்.

சென்னை-15, என். வி. ராமசுப்ரமணியன்

திரு ஸ்ரீபால் அவர்களுக்கு,

இரவு வேளையில் பிரசவ வேதனைப்படுகிறவர்கள், ஆபத்தான நிலையில் உள்ள நோயாளிகள் போன்றவர்களுக்கு ஒவ்வொரு பஸ் டிப்போவிலும் தமிழக அரசே டாக்ஸியை நிறுவலாம். ஆபத்து நிலையில் உள்ளவர்கள் ஃபோன் செய்தால் உடனே டாக்ஸியை அனுப்பினால் வசதியாகவும் தைரியமாகவும் இருக்கும். ஆவன செய்வீர்களா?

சென்னை-20 ஆர். சுலோசனா

அன்புள்ள திரு. கே. பாலசந்தர்,

நாட்டிலுள்ள பெரும்பான்மை மக்களின் வாழ்க்கைத்தரம் குறித்து ஒரு படம் எடுங்களேன். தலைப்பு இதோ: ''மிச்சமில்லை! மிச்சமில்லை!''

நாகர்கோயில்-1 குமரி அமுதன்

ஜெயவர்த்தனாவுக்கு,

கலவரங்கள் ஓய்ந்தால்தான் பேச்சு வார்த்தை நடத்துவேன் என்று கூறியிருக்கிறீர்கள். கலவரங்களை ஓயச் செய்யத்தானே பேச்சு வார்த்தை நடத்தச் சொல்கிறோம். நோயைக் குணப்படுத்த ஆபரேஷன் செய்யச் சொன்னால், 'நோய் தீர்ந்த பின்தான் ஆபரேஷன் செய்வேன்' என்கிறீரே, நியாயமா?

சென்னை-20 இரா. கணபதி

அன்புள்ள திரு. வைரமுத்து,

உங்களுக்குச் சொற்கள் கிடைப்பது எங்கிருந்தோ? கற்பனை பிறப்பது எப்படியோ? கவிதைகள் உங்கள் குழந்தைகளா? கொஞ்சிக் குலவிக் கொண்டாடுகிறீர்களே! வார்த்தைகள் கைகட்டிச் சேவகம் புரிகின்றன; உவமைகள் சித்தமாய் இருக்கின்றன; உண்மைகள் உம்மைத் தேடி வருகின்றன. இந்த விந்தைகள் எப்படி நிகழ்கின்றன? எனக்கும் சொல்லுங்கள்.

கரூர், ஆர். ராஜலட்சுமி



ராகேஷ் சர்மா அவர்களே,

இங்குள்ள கழகக்கட்சி ஏதாவது ஒன்றில் சேர்வீர்களானால் உங்களுக்கு 'விண்வெளி கண்டான்' என்ற பட்டம் கிடைக்கும். அதோடு தேர்தல் காலத்தில் 'விண்வெளி கண்ட முதல் கட்சி எங்கள் கட்சியே! எங்களுக்கு வாக்களித்தால் உங்களையும் விண்ணுலகு அனுப்புவோம்' என்று பிரசாரமும் செய்வார்கள்!

இராஜபாளையம் பி. பி. சௌந்திரபாண்டியன்



எழுத்தாளர் சுஜாதா அவர்களுக்கு,

ஒரே சமயத்தில் நான்கு வார இதழ்களில் தொடர்கதை எழுதிய நீங்கள் இப்போது ஏன் தொடர்கதைகள் எழுதுவதில்லை? கல்கி ஆண்டுமலரில் சண்டிப்

பாக ஒரு தொடர்கதை எழுதவும்... எனக்கு அந்த மெக்ஸிகோ சலவைக் காரி ஜோக்கைத் தபால் மூலம் சொல் லுங்கள்!

குளச்சல் எம். எம். இப்ராஹீம்



திரு. எம். ஜி. ஆர். அவர்களுக்கு,

சத்துணவு பெறும் 70 லட்சம் குழந்தை களுக்குச் சீருடை என்று அறிவித் தீர்கள். இது உண்மையிலேயே புக ழுரைக்கும் அப்பாற்பட்ட மிகப்பெரிய விஷயம். அடுத்த தேர்தலின் போது தமிழகத்தில் உள்ள அனாதைக் குழந் தைகள் அனைவருக்கும் ஆளுக்கு ஒரு அம்மா, அப்பா வழங்கப்படும் என்ற அறிவிப்பை எதிர்பார்க்கிறோம்.

சென்னை-44 கே. கணபதி



அன்புள்ள பி. டி. உஷாவுக்கு,

பம்பாய் தேசிய விளையாட்டுப் போட்டி யில் தாங்கள் காட்டிய திறமையைப் பாராட்டுகிறேன். 400 மீட்டர் தடை தாண்டல் போட்டியில் ஆசிய விளை யாட்டில் தங்கத்தை வென்ற வலசம் மாவையே வென்று விட்டீர்களே! வரவிருக்கும் ஒலிம்பிக்கில் உங்கள் திறமை அதிகரித்து நீங்கள் பதக்கம் பெற வாழ்த்துகிறேன்.

வெலிங்டன் எஸ். மோஹன்

# கடிதம்?



டியர் அமிதாப்,

உங்கள் உயரத்தின் உண்மை ரகசியம் என்ன? ஒட்டகப் பால் குடித்து வளர்ந் தேன் என்று உடான்ஸ் விடாமல் உண்மையைக் கூறவும். அப்படியே ஜெயாவிடம் ரகசியம் பேசுவதென்றால் என்ன செய்வீர்கள் என்றும் எழுதவும்.

சேலம்-7 வத்ஸலா முரளிதர்

அன்புள்ள ஜனார்த்தன் பூஜாரிக்கு,

ஏழைகளைக் கைதூக்கி விட தேசிய வங்கிகள் மூலம் இருபது அம்சத் திட் டத்தின் கீழ் வாரி வாரிக் கடன் வழங்குகிறீர். ஆனால் கொடுக்கப்பட்ட கடன்களில் பெருமளவு ஆளும் கட்சி யின் கஜானாவுக்குப் போகிறது என்று எதிர்க்கட்சியினர் பேசுவது மனத்தை உறுத்துகிறதே. விளக்கம் கூறுவீரா?

பங்களூர் எஸ். கீதா

அன்புள்ள அமெரிக்க ஜனாதிபதிக்கு,

இரு சிறுவர்களின் சண்டையைக் கண்ட ஒரு பெரியவர் அச்சண்டையை நிறுத்த உபாயம் தேடாமல் தன் கைத்தடியை ஒரு சிறுவனிடம் தந்து இன்னொருவனை அடிக்கத் தூண்டும் செயலை உலகம் என்று போற்றுமோ அன்றுதான் தங்களை என்னால் வாழ்த்த முடியும்.

புதுதில்லி பெ. முருகேசன்

ராகமாலிகா அன்பளிப்பான பட்டுப் புடைவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:

ஆர். ராஜலட்சுமி
82, தெற்குத் தெரு, கரூர், 630 001.











**உ**லர்ந்த மணலாய் அவனது உள்ளம் வேறெந்த சிந்தனையிலும் ஒட்ட மறுத்தது.

எங்கு திரும்பினாலும் அவளுடைய முகம் தான்!

படர்ந்த நெற்றியும்... பூனைக்குட்டிகள் விளையாடுவது போன்று ஒன்றோடொன்று இணைந்துக் கிடக்கும் புருவங்களும், எழிலாய் சற்றே மேல் தூக்கிய நாசியும்... ஆழ்மனம் வரை சென்று ஆயிரம் கணைகளை வீசும் திறன் பெற்ற விழிகளுமாய்... எங்கு திரும்பினாலும் ராதாவின் எழிற்கோலம் தான்...

சீச்சீ... எவ்வளவு பெரிய தவறு இது...!

நேற்று வரை அவளது நினைவில் நினைத்த தில் தவறில்லை... ஆனால் இன்றோ!

அவள் வேறொருவருக்கு மனைவியாகிவிட் டிருப்பாளே!

இனியும் அவளது நினைவில் ஆழ்வது தர்மமாகுமா?

தவறுதான்...

ஆனால்—

அவளை விடுத்தால் இந்த வாழ்க்கையில் நினைப்பதற்கு வேறென்ன இருக்கிறது...? அவளின்றி எல்லாமே சூன்யமாகப் படு கிறதே...! அவளின்றி அவள் பற்றிய சிந்தனையின்றி வாழ்நாளின் மீதிப் பகுதியை எப்படி ஓட்டுவது?

மணற்பரப்பில் மல்லாந்து கிடந்த ரவியின் உள்ளத்தில் வேதனை பிசையல்... அவனது உள்ளத்தின் கொந்தளிப்பை அறி யாமல் கடல் கன்னி தனது அலைக்கரங்களை நீட்டிச் சந்திரனோடு சல்லாபித்துக் கொண் டிருந்தாள்.

இதுமாதிரியான ஒரு முட்டு முனைக்கு அழைத்துச் செல்லும் என்று தெரிந்திருந் தால் காதல் என்கிற சுழலுக்குள் சிக்காமல் இருந்திருக்கலாமே என்கிற கழிவிரக்கம் அவனுள்!

பழைய நினைவு அவனுள் மோதுகிறது!

''ராதா... இனியும் என்னாலே பொறுக்க முடியாது... எங்க வீட்லே அத்தனை பேரும் எனக்குக் கல்யாணம் செஞ்சு வெச்சாத் தான் ஏதோ தங்களுக்கு ஜன்ம சாபல்யம் கிடைக்கும் என்பது போல முனைப்பா இருக்காங்க... நீ என்னன்னு சீக்கிரமா உங்க வீட்ல பெர்மிஷன் கேட்டு வாங்கத் தயங்கறே! எந்தப் பக்கமும் என்னாலே சொல்ல முடியாம தவிக்கிறேன்!

''பாருங்க ரவி... உங்க அவசரத்துக்கு என்னாலே ஈடு கொடுக்க முடியாது... கல்யாணம் ஆனதும் வேலையை ரிசைன் செஞ்சாகணும்னு கண்டிஷன் போடறீங்க... உடனடி கல்யாணமும் செஞ்சிண்டாக ணும்னும் சொல்றீங்க... எங்க குடும்ப நிலவரம் தெரிஞ்சும் நீங்க இப்படிப் பேசறது சரியில்லே...''

''ராதா, நீ சொல்றதுதான் சரியில்லே.. உனக்கு இப்பவே இருபத்தாறு வயசாகிறது.. உடனடி கல்யாணத்தை முடித்தாக வேண் டிய வயசு இது! எத்தனை நாளைக்குத்தான் குடும்பப் பாரத்தை நீ சுமப்பாய்? உன்னு வான வரைக்கும் தம்பி தங்கைகளைப் படிக்க வெச்சி கரை சேர்த்திட்டே... உன்னோட ஒரே ஒரு தங்கையும் வேலைக்குப் போக ஆரம்பிச் சுட்டா... நம்ப கல்யாணத்தை முடிச்சுட்டு வேலையை ரிசைன் பண்ணி நம்ப குடும் பத்தைக் கவனிச்சுண்டு நிம்மதியா இருன்னு சொல்றேன்!''

''ரவி... உங்க நோக்குலே நீங்க சொல் றது சரியாகப் படலாம்... ஆனா.... குறைந்த பட்சம், இரண்டு மூன்று வருஷ மாவது கல்யாணம் ஆனப்புறமும் நான் வேலைக்குப் போய் என் சம்பாத்தியத்தை எங்க குடும்பத்துக்குக் கொடுத்தாகணும்... நீங்க இதுக்கு ஒத்துக்கறேன்னு சொல் லுங்கோ... அடுத்த முகூர்த்தத்திலேயே நம்ப ரெண்டு பேரும் கணவன்—மனைவி ஆயிடலாம்!''

''தோ பார் ராதா... இது விதண்டா வாதம்... நான் நேருக்கு நேரா எதையும் சொல்ல விரும்புபவன்... அதான் இப்பவே சொல்றேன்... இப்ப சரின்னு சொல்லிட்டுக் கல்யாணம் ஆனதும் நீ வேலையை விட்டு டுன்னு என்னாலே சொல்ல முடியும் இல்லையா? கல்யாணத்துக்கப்புறம் நீ வேலைக்குப்போறது எனக்குப் பிடிக்கலே...''

''ரவி... இப்ப ஒண்ணு சொல்லிட்டு, கல்யாணத்துக்கப்புறம் விட்டுடுன்னு நான் கேட்டுடுவேனு என்ன? கொடுத்த வாக்கைக் கணவன் காப்பாத்தலேன்னு, அவன் கொடுத்த மனைவிங்கற அந்தஸ்தையும் வேணும்னு வந்துட வேண்டியதுதான்... உங்களை நான் மனசார நேசிக்கறதே உங்களோட வெளிப் படையான குணத்துக்குத்தான்!''

---

மேற்கு ஜெர்மனியிலுள்ள ஒருநாளி தழின் மீது, அந்த நாட்டு ரயில்வே நிர்வாகம் கேஸ் போட்டு ஜெயித்து விட்டது. காரணம் என்ன? டிக்கெட் வாங்காமல் பயணம் செய்வது எப்படி என்பதற்கு அதில் உபாயங்கள் கூறப் பட்டிருந்ததாம்!

ஆதாரம்: லைன்.
தகவல்: ராஜேஸ்வரி.



''ஆமாம்... இது மாதிரி பேச்சுக்குக் குறைவில்லே... ஆறு சண்டிஷனே மாத்திரம் தளர்த்தாதே! இத்தனே இக்கட்டுகளே வெச்சுண்டு உன்னே எவன் காதலிக்கச் சொன்னது?''

''ரவி... காதல்ங்கறது எவரையும் கேட்டுண்டு மனசுலே நுழையறது இல்லே... நானுகவும் ஆரம்பிக்கலே... நீங்கதான் என்னே முதலில் கேட்டீங்க... என் மனசுலேயும் என்னேயறியாமல் உங்க மேலே ஒரு விருப்பம் இருந்திருக்கு... அதான்...''

''முடிவா நீ என்னதான் சொல்றே ராதா?''

''சொல்றதுக்கு என்ன இருக்கு... உங்க கண்டிஷன்படி வேலேயை ரிசைன் செஞ்சு கட்டுக்கல்யாணம் செஞ்சுக்கறேன்... பட்... மூணுவருஷமாவது நீங்கபொறுத்தாகணும்.''

''நோ... நோ... என்னுல முடியாது..' நாம்ப பிரிஞ்சுடலாம். எனக்கு வேற இடத்துல பெண் பார்க்கச் சொல்லி வீட்டிலே சொல்லிடறேன்...'' என்றுன் ரவி...

''உங்க சௌகர்யம்...'' என்றுள்.

ரவி கோபத்தோடு வந்து விட்டான்.

கொஞ்சம் முறுக்காக இருந்தால் அவள் வழிக்கு வந்துவிடுவாள் என்று அவனுள் ஒரு நம்பிக்கை.

இரண்டு மாதங்களாவது வீம்பாக இருந்து பார்க்க வேண்டும் என்ற முடிவுடன் அவளைத் தவிர்த்தான்.

ஆனுல் அடுத்த இருபத்தைந்து தினங்களில் அவள் தனது திருமண அழைப்புடன் அவனைத் தேடி வருவாள் என்று அவன் கனவிலும் நினைக்கவில்லே!

''ராதா... உனக்கே இது நியாயமா இருக்கா? தெய்வத்துக்குக் கூட இது அடுக்காது... என்னே இப்படி நடுத்தெருவில் விட்டு விட்டு நீ போகலாமா? மூணு வருஷம் என்று சொல்லி விட்டு முப்பது நாட்களுக்குள்ளாக வேறொருவனே மணக்கப் போகும் அழைப்புடன் வந்து நிற்கிறுயே!''



அவன்: ''ஆட்டோவில் போகும் போது மட்டும் தான் ஓடுது!''

இவன்: ''எதுடா?''

அவன்: ''என் மாமனுர் வாங்கிக் கொடுத்த ஆட்டோமேடிக் வாட்ச் தான்!''

—உ. ராஜாஜி.

தான் ஓர் ஆண்பிள்ளே என்பதையும் மறந்து அவன் அரற்றி விட்டான்....

அவர்கள் வழக்கமாகக் கடற்கரையில் சந்திக்கும் இடத்தில் சந்தித்துத்தான் அவள் அழைப்பிதழைக் கொடுத்தாள்...

''ரவி... உங்க மேலே எனக்குத் துளிக்கூட கோபமில்லே... என் வாழ்நாள் முழுவதுலேயும் உங்களே என்னுல மறக்க முடியாது... பட்... என்ன செய்யறது... நீங்களோ முடிவா உங்க நிலேமையைச் சொல்லிட்டுப் போயிட்டீங்க... என்னேச் சந்திக்கறதை நீங்க 'அவாய்ட்' செஞ்சதுலே உங்க முடிவு இறுதியானதுன்னு தோணித்து... இந்தக் கல்யாணமும் திடீர்னு 'செடில்' ஆனதுதான்... அவருக்கு மங்களூர்லே பிஸினெஸெல்லாம்... சொந்தக் காரங்க மூலமா இந்த வரன் வந்தது.... எனக்கும் மங்களூருக்கு டிரான்ஸ்பர் வாங்கிக்க முடியும்... எத்தனே வருஷம் வேண்டுமானுலும் நான் வேலேக்குப் போய்ச் சம்பளத்தை இங்கே எங்க குடும்பத்துக்கு நான் விருப்பப்படறவரைக்கும் அனுப்பலாம்னு சொன்னுர்... உங்களுக்கு வாழ்க்கைப்படும் பாக்கியம் இல்லேன்னு ஆயிடுத்து...பெண்ணு பொறந்தாச்சு. எவரையாவது கல்யாணம் செஞ்சுண்டுதானே ஆகணும்... ஏதோ பொருளாதார விஷயத்திலே அனுசரணையா இருக்காரே என்கிறதுனுலே சரின்னு சொல்லிட்டேன். ரவி... தயவு செய்து உங்களேத் தூக்கியெறிஞ்சுட்டு அவரைக் கல்யாணம் செஞ்சுக்கறதா தப்பா நெனேக்காதீங்க...'' என்று ராதா விம்மினுள்.

''ராதா... அவசரப்பட்டுட்டயே... கொஞ்சம் பிடிவாதத்துடன் முறுக்கா இருந்தா, நீயாக என் வழிக்கு வருவேன்ற எண்ணத்தில் உன்னிடத்தில் சற்று பாராமுகமாய் இருந்தேன்! இப்படி மோசம்போயிட்டேனே! நீ இல்லாம இனி எப்படி வாழ்வேன் ராதா?''

''ரவி, மனசைத் தேத்திக்குங்க... காலம் கடந்து போயிடுத்து... நான் போக்குல எல்லாம் சரியாயிடும்... நான் என்றைக்கும் உங்களே மறக்க மாட்டேன்... நீங்க கல்யாணத்துக்கு வரணும்னு நான் இந்த அழைப்பிதழைத் தரலே... உங்களால தாங்கிக்க முடியாதுன்னு எனக்குத் தெரியும்... பட்... இன்விடேஷன் தர வேண்டியது என் கடமை இல்லேயா... நான் வரேன்...'' ராதா போய் விட்டாள்.

அவள் நினேவை விட முடியாமல் அவன் மணற்பரப்பில் துடித்துக் கிடக்கிறுன்.

உன்னே இன்னொருவனேடு சேர்த்துப் பார்க்கும் துணிவு எனக்கு வரவில்லேயே ராதா!

...முடியாது... என்னுல் முடியாது....

...இனி என்னுல் வாழ முடியாது...

இந்த ஜனத்திரள் அடங்கிக் குறையட்டும். எந்தக் கடல் சாட்சியாய் நாம் நேசிக்க ஆரம்பித்தோமோ, அந்தக் கட லுடன்

இக்கியம் ஆகிவிடுகிறேன் ராதா... என்னாலே இனி வாழ முடியாதும்மா...

அவனையுமறியாது உறங்கிப் போனவன் தன் மீது ஏதோ படர்வது உணர்ந்து, திடுக்கென விழித்தபோது...

ராதா அவனது விரல்களைத் தனது விரல்களுடன் பின்னிக் கொண்டு மென்மையாக முத்தமிட்டுக் கொண்டிருந்தாள்.

''ராதா... என்ன இது...உனக்கு இன்னிக்குத் திருமணம் ஆகிவிட்டது... நீ இன்னொருவன் மனைவி...தோ...எனக்குப் புரியலையே... இதென்ன மாயை...'' துடிதுடித்தான்.

''ரவி!.. இனிமே உங்களை விட்டு நான் பிரிய மாட்டேன்... என்னை வேண்டாம்னு சொல்லிடாதீங்கோ...''

''உன்னோட கல்யாணம்...''

''தோ... ஆகலே... கல்யாணம் ஆனதும் நான் வேலைக்குப் போகக் கூடாதுன்னு நீங்க வெளிப்படையாச் சொல்லுங்க... என் குடும்பத்தோட நிலைமையை உத்தேசித்து உங்களை இழக்கக் கூட முடிவெடுத்தேன்... என்னைக் கல்யாணம் பண்ணிக்க முன் வந்தானே ஒரு அயோக்கியன்... நான் எத்தனை நாளைக்கு வேணும்னாலும் வேலைக்குப் போய்ச் சம்பாதித்து எங்க குடும்பத்துக்கும் கொடுக்கலாம்னு வாயொழுகப் பேசினான்... ஆனா அங்கே போய்ப் பார்த்தா பிஸினெஸ் செய்யறுன்றது சுத்த 'ஹம்பக்'னு தெரிஞ்சுது... ஒழுங்கான சம்பாத்தியமே கெடையாதாம்... அக்கம்பக்கத்துலேர்ந்து விஷயம் வந்தது. என்னோட சம்பாத்தியத்தைக் குறி வெச்சுத்தான் அவன் கல்யாணத்துக்கு முன் வந்த விஷயம் அவனோட சொந்த அக்கா யார் கிட்டேயோ சொல்லிண்டிருக்கறச்சே தானே காதால கேட்டுட்டேன்... கல்யாணம் ஆனதும். அவளே என்னை வழிக்குக் கொண்டு வந்து சம்பளத்தை அவனுக்குக் கொடுக்கச் செய்ய வேண்டியதுதான் என்று அந்த மகராசி *சொல்லிண்டு இருந்தா....

## அருள்வாக்கு

எது நிஜமான தாக்ஷிண்யம், எது நிஜமான மனுஷ்யாபிமானம் என்று யோசித்துப் பார்ப்போமானால் எது தேசத்தில் தர்மத்தை நிலைக்கப்பண்ணி நல்ல ஜனங்களுக்குத் துஷ்டர்களிடம் பயமில்லாமல் ஸெக்யூரிட்டியை கொடுக்கிறதோ அதோடு எது குற்றம் பண்ணினவனையும் இனிமேல் அப்படிப் பண்ணாமல் கட்டுப்படுத்துகிறதோ அதுதான் நிஜமான தாக்ஷிண்யமும் மனிதாபிமானமுமாகும்.

ஒருத்தன் ஏதோ ஹிம்ஸை பண்ணினானென்றால் ஜனங்களிலேயே இன்னொருத்தன் அப்போது அவனைப் பதிலுக்கு ஹிம்ஸை பண்ணி ஹிம்ஸையை இரண்டாக்குகிறானென்றால் அதுதான் தப்பு. இங்கே பெர்ஸனலாக த்வேஷம் கோபதாபம் உண்டாகின்றன. ஆனால் ராஜாங்கம் என்ற ஸ்தாபனம் ஹிம்ஸை செய்த ஒருவனை பெர்ஸனல் காரணமில்லாமல், தர்மத்தின் பொருட்டு, சிக்ஷித்து, அவனுக்கு ஹிம்ஸை தருவது இப்படியல்ல. அவனால் இனிமேல் ஜனங்களுக்கு ஏற்படக் கூடிய ஹிம்ஸையைப் போக்கவே இந்த சிக்ஷை.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராசார்ய சுவாமிகள்



''வேதனைப்பட்டேன்...துடிச்சேன்... அழுதேன்... கல்யாணத்தை நிறுத்திடுன்னு அம்மாகிட்டே சொன்னேன்...

''இவ்வளவு ஆயிடுத்து...இனிமே எப்படிக் கல்யாணத்தை நிறுத்தறது... ஏதோ எங்களை நாங்க பார்த்துக்கறோம்... கொஞ்ச நாள், அவனுக்கும்,எங்களுக்குச் சம்பாதிச்சுப் போட்ட மாதிரி போடு... குழந்தை குட்டின்னு ஆயிட்டா பொறுப்பு வந்து சம்பாதிக்க மாட்டானா... இதை விட்டா செலவு அதிகம் பண்ணும் உனக்குக் கல்யாணம் செய்ய வேறு வரன் கிடைக்காது... கன்னி கழியணுமோன்னோ... செஞ்சுக்கோன்னு அம்மா சொல்லிட்டா... 'சீ... எல்லோருமே சுயநலக்காரர்கள் தான்' என்று வெறுப்பு ஏற்பட்டது... யார் கிட்டேயும் சொல்லாம ஓடி வந்துட்டேன் ரவி...இனிமே உங்களைவிட்டுப் பிரியவே மாட்டேன்... என்னை மன்னித்து நீங்க ஏற்றுக்கலேன்னா இந்தச் சமுத்திரம் தான் எனக்குக் கடைசி இடம்...'' ராதா கதறினாள்...

அவளை மெல்ல வருடிக் கொடுத்தான்...

''ராதா... ப்ளீஸ் அழாதே... உன்னை விட்டுட மாட்டேன் கவலைப்படாதே... முதல் வேலையா நாளைக்கே நாம் ரிஜிஸ்டர் திருமணத்துக்கான ஏற்பாடுகளைச் செய்துவிட்டுக் கோவிலில் மாலை மாற்றிக்கொண்டு விடுவோம்... நீ மேஜர்... யாரும் ஒன்றும் செய்து விட முடியாது... வேலையை விட்டு விடு... நான் பார்ட் டைம் ஏதாவது சம்பாதித்து உங்க குடும்பத்துக்கு உதவறேன்... பாவம் அவங்களுக்கும் இது பெரிய ஷாக் இல்லையா...?''

அவளைத் தேற்றினான்.

பொய்ப் பிணக்குடன் மேகத்திற்குப் பின்னால் சற்று மறைந்திருந்த சந்திரன் மீண்டும் வெளிவந்து கடல் கன்னியைத் தனது எழில் நோக்கால் அணைத்தான்...

இங்கு மணற்பரப்பிலோ...

# சொல் ஒன்று வேண்டும்

25

அடிமேல் அடி!

பரந்தாமனின்கையிலிருந்த பெல்ட் — விஜியின் உடம்பில் சுழன்று விளையாடுகிறது....

மீனாட்சி 'ஓ'வென அழுகிறாள். உமாவோ, இந்தக் காட்சியைக் காணச் சகியாது இரு கைகளாலும் கண்களைப் பொத்திக் கொள்கிறாள்.

பரந்தாமனின் முகம், கோபத்தில் 'ஜிவு ஜிவெ'ன்று சிவந்து கிடக்கிறது...

எத்தனை பெரிய குற்றத்தைச் செய்திருக்கிறாள் இவள்...

பொறியில் சிக்கிய குற்றவாளியை — கொலையாளியைத் தப்ப விட்டு விட்டாளே..

இது துரோகமில்லையா...

அவரது கோட்டைக்குள்ளேயே எதிரி என்றால் — அவரால் தாங்க முடியுமா...?

பெல்ட்டின் நுனியில் விஜியின் தளிர் உடம்பில் அடிபட்டுத் துளிர்த்த குருதிச் சிவப்பு...

''ஐயய்யோ... வாயில்லாப்பொண்ணை, அடிச்சே கொன்னுடாதீங்க...''

''எதுடி வாயில்லாப் பொண்ணு... இதுவா... எமன்டி. சரியான எமன். இத்தனை நாள்வரைக்கும் போனாப் போறதேன்னு விட்டு வச்சிருந்தேன் பாரு... என் புத்தியச் செருப்பாலே அடிக்கணும். போலீஸ்காரனுக்குப் பாசம் கூடாது. பாசம் கூடாதுன்னு நானே சொல்லிட்டு— இவ விஷயத்துல மாத்திரம் மனசைத் தளர விட்டிருந்தேன்பாரு...மொதல்லே— என்னைக் கட்டுத் தள்ளணும்டி இந்த அரசாங்கம்...''

'பளீ'ரென ஒவ்வொரு அடிவிழும் பொழுதும், கல் மனசாய், ஒரு ஓரமாய் நின்றிருந்த எத்திராஜுக்குக் கூட, மயிர்க்கால்கள் சிலிர்க்கின்றன...

விஜி...

அத்தனை அடிகளுக்கும் ஈடுகொடுக்கிறாள்.

பேச்சு வராத ஊமையாக இருக்கலாம். அடியின் வேதனை தாங்காது வாய் விட்டு அலறக் கூடவா மாட்டாள் ஒருத்தி...

இத்தனை அடிக்கும், கண்களிலிருந்து பொட்டுக் கண்ணீர் சிந்தவில்லையே.

அது என்ன, அத்தனை கல்லூளி மங்கத் தனம்... ஒரு பெண்ணுக்கு இத்தனை சகிப்புத் தன்மை உண்டா?

எல்லாமே எத்திராஜால் வந்தது...

பிறந்த நாள் கொண்டாடத்தின் இடையே விளக்குகள் அணைந்ததும் — அந்த



நேரத்தில், விஜி—வாசற் பக்கம் நின்றதும்—மறுபடி விளக்குகள் ஒளிரத் தொடங்கிய போது—விஜி, கூடத்துச் சுவரில் சாய்ந்திருந்ததும்... பரந்தாமனின் கண்களுக்குத் தப்பவில்லை.

அதே சமயத்தில்—எத்திராஜ் ஓடிவந்து சொன்ன வார்த்தைகளோ... நெஞ்சுக்குள் பற்றி எரிகிற சந்தேகத் தீயைக் கொழுந்து விட்டு எரியச் செய்கிறது...



''எஜமான்....''

''என்னடா?''

''மெயினை ஆஃப் பண்ணினது விஜிம்மா தாங்க... அப்ப நான் வெளி கேட்டிட்ட நின்னு 'கான்ஸ்டபிள் த்ரீ நாட் ஒன் கூடப் பேசிக்கிட்டிருந்தேன். பேச்சு வாக்குல தலையைத் திருப்பினப்ப—இதோ, இந்த இடத்துல 'சரக்'குனு விஜிம்மாவோடப் பட்டுப் பாவாடையோட விசிறலைக் கவனிச்சேன்... அதுக்குள்ள அவங்க மெயினை ஆஃப் பண்ணிட்டுத் திரும்பிட்டாங்க... நான் ஓடிவந்து மறுபடியும் மெயினை ஆன் பண்ணறதுக்குள்ளே—ஒரு உருவம் எம்மேல வேசா மோதிக்கிட்டு வெளியே ஓடிடுச்சுங்க...''

அவ்வளவுதான்... ஒரு கணத்தில் அவரது விழியிரண்டும் நெருப்புத் துண்டங்களாக ஜொலிக்கத் தொடங்கி விட்டன... முறுக்கி விடப்பட்டிருந்த மீசையின் நுனிகள் துடிக்கத் தொடங்கி விட்டன.

போதாக் குறைக்கு—அவருடன் வாசலுக்கு வந்த போலீஸ் கமிஷனரின் பார்வைக் கணைகள் வேறு... அவரைக் கூனிக் குறுக வைப்பதாய்...

கமிஷனருக்குத்தான் பரந்தாமனின் மேல் இதுவரையில் எத்தனை நம்பிக்கை?

இன்று, அந்த நம்பிக்கைகளெல்லாம் தான் தூளாகி விட்டதே...

எல்லாம் யாரால்...?

இதோ—அவர் முன்பு, உதடு கிழிபட்டு, கன்னத்தில் கீற்றாய் ரத்தம் கொட்டி, இடுப்பிலும், முதுகிலும் பெல்ட்டின் வேகமான தாக்குதலுக்கு ஆளான ரவிக்கை கிழிபட்டு...

உச்சந்தலையிலிருந்து — உள்ளங்கால்வரையில் வியர்வையில் குளித்திருந்தாள் அவள்.. அடிக்குப் பயந்து வாய் விட்டு அழாதிருந்தாலும்—அவளின் தேகம், தன்னால் இனித்தாங்க முடியாது என்பது போலத் தள்ளாடுகிறது.

'ஓரிடத்தில் நிலையாய் நிற்க முடியவில்லை அவளால்... கண்கள் செருக, தள்ளாடி விழப் போன சமயத்தில்தான், மீனாட்சி ஓடி வந்து மருமகளைத் தோள் மீது சாத்திக் கொள்கிறாள்...

வேகமாய் ஓங்கிய பெல்ட்—தயங்கினாற் போலச் சற்று நிற்க...

இதுதான் சாக்கென்று மீனாட்சி, அவரைப் பிலுபிலுவெனப் பிடித்துக் கொண்டு விடுகிறாள்...

''முடிஞ்சுதா இன்னும் ஏதாவது இருக்கா...?''

''இப்பத்தான்டி ஆரம்பம்... இனிமே இந்த வீட்டுல யாராவது இது மாதிரிக் குற்றவாளிக்கு உள்கையா இருந்தீங்க...

அனுராதா ரமணன்

நான் பேச மாட்டேன். என் பெல்ட் பேசும்!''

''குழந்தை மூச்சு பேச்சில்லாமக் கிடக்கா. ஐயோ, என்னங்க... இப்பப் போய் உங்களுக்கு இந்தக் கோவம் வந்திருக்கே.... ரொம்ப அநியாயமங்க...பெத்தவங்க இல்லாத பொண்ணு. நாளைக்கே — கல்யாணத்துக்கு மாப்பிள்ளை வீட்டுக்காரங்க முன்னாடி நிக்க வைக்க வேண்டியிருந்தா... இப்படியா ரத்தக் களறியான உடம்பைக் கொண்டு போய் நிறுத்துவாங்க...''

''வாயை மூடு மீனாட்சி...''

—பரந்தாமன் உறுமுகிறார்.

''இனிமே, அந்தக் கொலைகாரனுக்கு உடந்தையா இவ ஏதாவது நிரசமத்தனம் செஞ்சா... மருமகள்னு கூடப் பார்க்கமாட்டேன். சொல்லி வையி...''

பரந்தாமன், பெல்ட்டைச் சுற்றி வீசியெறிந்து விட்டு நகருகிறார்...

அவரது தலை மறைந்ததும், உமா ஓடி வந்து, விஜியைத் தன் மடி மீது வைத்துக் கொள்கிறாள்.

மீனாட்சி, விஜியைத் தொட்டுத் தொட்டுப் பார்க்கிறாள்.

அடிபட்ட பறவை போலக் கிடக்கிறாள் அவள். சுத்தமாய் நினைவில்லை.

மீனாட்சியின் எரிச்சல் மிகுந்த பார்வை எத்திராஜின் பக்கம் திரும்ப...

அவன் அங்கிருந்தால்தானே...

''விஜி... விஜிம்மா...''

மீனாட்சி, மருமகளின் தோளைத் தொட்டு உலுக்க, மிக லேசான முனகலே பதிலாக...

முனகலா, மூச்சுக் காற்றா... தெரியவில்லை...

மீனாட்சி, புடவைத் தலைப்பைச் சுருட்டி, வாயில் வைத்துக் கொண்டு, குலுங்கிக் குலுங்கி அழுகிறாள்.

எத்தனை ஆசையாக வளர்த்த குழந்தை... அடிக்க எப்படி மனசு வந்தது?

விஜியின் சிறு வயசில், அவளது காலில் முள் குத்தினால் கூடப் பதறி விடுவாரே பரந்தாமன்.

மருமகளைத் தூக்கி வைத்துக் கொண்டே அலைவாரே ...

மீனாட்சி கூட, எத்தனையோ முறை வேடிக்கையாக அவரிடம் சொல்லியிருக்கிறாள்....

''நீங்க இப்படித் தூக்கி வச்சுட்டே அலைஞ்சா, அந்தக் குழந்தைக்கு நடையே மறந்து போயிடும்...''

''அதுக்கு இல்லே மீனாட்சி... சிமெண்டு பூசிய தரையா இருந்தாப் பரவாயில்லே... புல் தரையில... மண் தரையில நடக்கறப்ப முள் ஏதாவது குத்திடுச்சன்னா... 'வலிக்கறது மாமா'ன்னுகூட இவளாலே வாய் திறந்து சொல்ல முடியாது இல்லையா... அதனாலேதான்...''

''இதைச் சொல்லும் போதே அவரின் கம்பீரமான குரல் கம்மிப் போகும்... பெரிய, கூர்மை மிகுந்த கண்கள் — செக்கர் வானமாய்ச் சிவந்து போகும்...

அப்போர்ப்பட்டவரா இன்று இப்படி...

## அறுவை ஒரு கப்



● ''எலக்டிரிக் டிரெயின் எஞ்சின் லேந்து புகை வருமா?''
''ஓ! வருமே! எஞ்சின் டிரைவர் சிகரெட் பிடிச்சா!''

● ''அனுராதாவுக்குப் பிடிச்ச உடை எது?''
''சில்க்கில் தைக்காத எதுவும் பிடிக்கும்.''

● ''பல்லவன் கண்டக்டர்கள் ரொம்ப பலசாலிங்க.''
''எப்படிச் சொல்றீங்க?''
''அவங்க ஊதினா பஸ் நகருதே.''

● ''ஆச்சர்யமாயிருக்கே! பேனா இல்லாதவே போய் பரீட்சைல பாஸ் பண்ணிட்டயா?''
''ஆமாம். டைப்ரைட்டிங் எக்ஸாம்ல.''

● ''வேடந்தாங்கலுக்கு வருகிற பறவைகள் எல்லாம் எங்கேருந்து வருது?''
''முட்டையிலேயிருந்து!''

● ''ஜாஸ் மோகன் எப்படி பிஸ்கட் வாங்குவார்?''
''ஜாகலை.''

● ''முத்துசாமி ஐயர் மாதிரி தெரு விளக்குல படிக்க ஜட்ஜா வரது இப்ப முடியாத காரியம்.''
''ஏன்?''
''இப்பத்தான் தெரு விளக்குகள் எரியறதே இல்லையே!''

● ''ராகேஷ் சர்மா பத்தி மலையாளப் படம் வந்தா அதை மெட்ராஸ்ல எப்படி ரிலீஸ் பண்ணுவாங்க?''
''விண்வெளியில் கழித்த இன்ப இரவுகள்'னு.''

—மௌஷ்மீ

அடித்து விட்டு, வெளியே போனாரே தவிர — எங்கே போவது என்கிற இலக்கு எதுவும் இல்லை பரந்தாமனுக்கு...

ஒரு உத்தேசமாய், கறுப்பு ஷெர்வாணி ஓடிய திசையில் காரைச் செலுத்துகிறார்.

அவளைப் பின் தொடர போலீஸ் படையையே அனுப்பியிருக்கிறது...

இத்தனை நேரம் — அவன் பாதாளத்தில் கூடப் போய் மறைந்து விடுவான்...

மனசுக்குள் அடிபட்டுச் சுருண்ட விஜியின் முகம்...

அப்பா... அத்தனை அடிக்கும் எவ்வளவு பொறுமையாய் இருந்தாள் அவள்?

சாதாரண சராசரி மனிதன் எவனும் இத்தனை அடிகளையும் வாங்கிக் கொண்டு, இப்படிக் கல்லாய் நிற்க முடியாது...

எது, அவளை இப்படி நிற்க வைத்தது?

ராஜாவின் மீதுள்ள கண்மூடித்தனமான பாசமா... காதலா...?

பரந்தாமன், வெள்ளமாய்ப் பெருகிய வியர்வையை ஒரு கையால் அழுந்தத் துடைத்தபடி, ஏதோ ஒரு பொட்டல்வெளியில் வெகு நேரம் காரை நிறுத்தி வைத்து விட்டு, மலைத்துப் போய் உட்கார்ந்திருக்கிறார்...

'இவ மேல எதுக்கு எனக்கு இத்தனை கோபம்?'

'ஒரு மனிதனின் மேல வச்சிருக்கிற பிரியமாகப் பட்டது, இந்த அளவுக்கு ஒரு பொண்ணுக்குச் சகிப்புத் தன்மையை வளர்த்திருக்குமா...'

அன்றிரவு—

அவர் வீடு திரும்ப வெகு நேரமாகி விட்டது... பங்களாவுக்குள் நுழையும் பொழுதே, அதன் மௌனம் அடிவயிற்றைக் கலக்குகிறது...

வீட்டு விளக்குகள் கூட ஏன் இப்படி அழுது வடிகின்றன...

'விஜியை அடித்ததில் இவைகளுக்குக்கூட வருத்தமோ...?

பரந்தாமன் ஒவ்வொரு அறையாகப் போய்ப் பார்க்கிறார்... ஒருவரும் இல்லை.

எல்லோரும் எங்கே போனார்கள்?

அவர் ஏதோ ஒரு சந்தேகத்துடன், உமாவின் அறைக்குப் போக...

அங்கே இரட்டைக் கட்டிலில் சின்னஞ்சிறு பூவாகப் படுத்திருக்கிறாள் விஜி...

கண்கள் மூடி, இதழ்கள் லேசாகத் திறந்தபடி... நெற்றியில் குங்குமப் பற்று போடப்பட்டிருக்கிறது... மெல்லிய அரற்றல் காற்றுடன் கலந்து...

பரந்தாமன், மீனுட்சியைப் பார்க்கிறார். அவளோ முகத்தை ஒடித்துக் கொள்கிறாள்.. உமா, இவரைக் கண்டதுமே, 'விருட்'டென எழுந்து, ஜன்னல் பக்கம் போய் நிற்கிறாள்...

பரந்தாமன் மெல்ல அடியெடுத்து விஜியின் அருகில் வந்து, கன்னத்தில் கை வைத்துப் பார்க்க...

உடம்பு முழுவதாய்க் கொதிக்கிறது...

பரந்தாமனுக்குள், இது நேரம் வரையில் இல்லாத பயம் ஜனிக்கிறது...

(தொடரும்)

# கூண்டுகள்

அமுதவன்

''ஆமா, பாட்டி நானெல்லாம் கூட வந்துருவோம்.''

''ஐஸ்கிரீம் வேணும் தாத்தா.''

தடதடவென்று மரப்பலகைகள் அதிரப் புழுதி பறக்க மரணக் கிணற்றில் மோட்டார் சைக்கிள் ஓட்டியதை அதிர்ந்து கொண்டே பார்த்தபோது குழந்தைமட்டும் பயமில்லாமல் பார்த்துக் கைகொட்டிச் சிரித்தது அவருக்கு ஆச்சரியமாயிருந்தது.

''தாத்தாவ் ரயில்ல போவோம் தாத்தா'' எக்ஸிபிஷனின் ஸ்டால்களுக்குப் பின்புறம் பொம்மைத்தண்டவாளங்கள் போடப்பட்டுப் பெட்டி பொட்டியாகக் குழந்தைகள் ரயில் உதறிக் கொண்டே ஓடிக் கொண்டிருந்தது. குழந்தை கேட்கிறானே என்பதற்காக ஏறி உட்கார்ந்த பிறகுதான் அவருக்கு வெட்கமாக இருந்தது.

**எ**க்ஸிபிஷனுக்குள் நுழைந்தபோது அத்தனை பரபரப்பு அவ்வளவு சீக்கிரம் தன்னைத் தொற்றிக் கொள்ளும் என்று அவர் நினைக்கவில்லை... எத்தனை விதமான மனிதர்கள்... காசைப்பற்றிக் கவலைப் படாமல் செலவழித்துக் கொண்டு, சந்தோஷ முகங்கள் வைத்துக் கொண்டு வலம் வருவது அவருக்கு உற்சாகமாக இருந்தது. பெரியவர்களெல்லாம் சின்னக் குழந்தைகளைவிட குதூகலமாய் இங்குமங்கும் திரிவதும், ஐஸ்கிரீமும், பாப்கார்னும் சாப்பிடுவதும், அண்டா மூடியளவு அப்பளத்தை வாங்கி விட்டுச் சாப்பிடத் தெரியாமல் திணறுவதும் ஜயண்ட் வீலில் உட்கார்ந்து அடிவயிறு ஜில்லென்று பயத்தில் ஓடடிக் கொள்ள அகோர உருவம் போய் வருவதும் பார்க்கப் பார்க்க வேடிக்கையாயிருந்தது.

குழந்தைசுரேஷின் மழலையானகமெண்ட்கள் அடிக்கடி அவரைச் சந்தோஷப்படுத்தின.

''தாத்தா இந்த ஜயன்ட் வீலை சூப்பர் மேன் ஒரே கையிலே தூக்கி வருவார் தானே தாத்தா?''

''ஆமாமா அலாக்காய்த் தூக்கிடுவார்''.

''தூக்கி அப்படியே தெருவில விட்டு வண்டி ஓட்டுவார்தானே தாத்தா''?

''ஆமா. ஸ்பீடா ஓட்டிருவார்.''

''தாத்தா, இதானே ஃப்ளையிங் சாசர் தாத்தா!''

''இது ஃப்ளையிங் சாசர் இல்லே. பெரிய்ய சைஸ் அப்பளம்''

''தாத்தா இந்த மோட்டார் சைக்கிள் ஓட்டறூரே இந்த அங்கிள் யார் தாத்தா?''

''நீதான் சொல்லிட்டயே. அங்கிள்னு. அவர் அங்கிள்தான்.''

''அந்த மோட்டார் சைக்கிளை நான் எப்ப ஓட்டணும் தாத்தா''.

''நீ பெரியவனானப்புறம் ஓட்டலாம்.''

''நான் எப்பப் பெரியவன் ஆவேன் தாத்தா?''

''சீக்கிரம் ஆயிருவே!''

''பெரியவனுயிட்டா அப்பா மாதிரி பிளேன்லே பாம்பே போயிருவேன் இல்லையா தாத்தா!''

''**தா**த்தாவ்'' — என்று குதித்தான் சுரேஷ். ''அங்க பாரு தாத்தா சிங்கம்... புலி. ஹையா ஜூ கூட இருக்கு தாத்தா.''

குழந்தை சுட்டிக்காட்டிய அந்தச் சிக்கலான மூலையில் 'மினி ஜூ' என்று பெயரிடப்பட்டு ஒரு கூடாரம் தெரிந்தது. சிங்கம், புலி, கரடி என்று சில மிருகங்கள் வார்னிஷ் பெயிண்டிங்கில் ஆர்வக் கண்களுடன் நின்றிருந்தன.

ராமரத்தினத்திற்கு ஒன்றும் பிடிபடவில்லை. எக்ஸிபிஷனில் இந்த மிருகங்களுக்கு என்ன வேலை? இவை ஏன் இங்கே வந்தன? இதுமாதிரி இடங்களில் சிறுவர்களைக் கவர வேண்டியதுதான். ஆனால் இப்படியெல்லாமா?

டிக்கெட் வாங்கிக் கொண்டு உள்ளே நுழைந்த போது அடைத்து கிடந்த இருட்டை விரட்ட டியூப்லைட்டுகளின் சோகை வெளிச்சம் பிரயாசை கொண்டிருந்தது. சின்னச் சின்ன கூண்டுகள். ஒரு புலி, ஒரு சிறுத்தை, காட்டுப் பூனை ஒன்று, ஒரு கரடி... பிறந்து ஆறு மாதமே ஆகியிருக்கும் நரி ஒன்று... ஒரு ஜோடி ஆஸ்திரேலியக் கிளிகள். சற்றுத் தள்ளிய கூண்டுக்குள் ஒரு மலைப்பாம்பு... அந்த இடமும் வசதியில்லாத அந்தக் கூண்டுகளும் அவை அடைக்கப்பட்டிருந்த விதமும் அவருக்குச் சங்கடத்தை ஏற்படுத்திற்று.

அந்த மிருகங்கள் எழுந்து சுயமாக நிற்க முடியாது. சுதந்திரமாகப் புரள முடியாது. நீட்டி நெளிந்து உடம்பை உதறிச் சோம்பல் முறிக்க முடியாது.

''தாத்தா என்ன தாத்தா இந்தப் புலி கண்ணை மூடிக்கிட்டே இருக்கு. தூங்குதா தாத்தா?''

அது உறங்கவில்லை என்பது புரிந்தது அவருக்கு. சோர்வு; எதுவும் செய்ய முடியாத முடக்கம். என்னால் எதுவும் செய்ய முடியாதென்று சுணங்கிக் கிடக்கும் நிர்ப்பந்தம்...

ஒவ்வொன்றையும் பார்க்கப் பார்க்கப் பாவமாக இருந்தது அவருக்கு. வாயில்லா ஜீவன்களைக் கொஞ்சமும் ஈவிரக்கமின்றி அடைத்துப் போட்டுக் கொடுமைப்படுத்தி

விருப்பதாகப் பட்டது. இவ்வளவு நேரமும் எக்ஸிபிஷனில் சுற்றிக் கொண்டிருந்தபோது இருந்த சந்தோஷமும் சுவாரஸ்யமும் மெதுவாக நழுவிக் கொள்ள, பரிதாபம், கோபம், ஆத்திரம் என்று குழப்பமான கலவை நெஞ்சில் குறுகுறுத்தது. அங்கே நின்று நேரத்தைப் போக்கக் கஷ்டமாக இருக்க—

அங்கே பொறுப்பானவர் போல் தெரிந்த நபரிடம் சென்று ''ஏன் சார் இந்த மிருகங்களைப் போட்டு இப்படி அடைச்சு வச்சிருக்கீங்க? கொஞ்சம் கூட அதுங்களுக்குக் காற்று வெளிச்சம் போன்ற வசதிகள் எதுவும் கிடையாது போலிருக்கே'' என்றாள்.

ராமரத்னத்தை விநோதமாகப் பார்த்தார் அந்த ஆசாமி. ''யார் சார் நீங்க? என்ன வேணும் உங்களுக்கு? குழந்தையைக் கவனமாய்ப் பார்த்துக்கங்க. கூண்டுக்கிட்டே போறான். ஓரமா நில்லுங்க சார்.''

''பேச்சை மாத்தாதேப்பா. இந்த மிருகங்களை இப்படி ஏனோதானோன்னு அடைச்சு வச்சிருக்கீங்களே. அதுங்க இருக்க வேண்டிய சூழ்நிலையே கொஞ்சம் கூட இல்லையே. சாப்பாடு வேற சரியில்லை போலிருக்கு. ஒவ்வொண்ணும் எலும்பும் தோலுமாயில்லே இருக்கு?''

அந்த ஆசாமிக்குக் கோபம் வந்தது. ''இத பாருசார்... எல்லாம் எங்களுக்குத் தெரியும். எல்லாம் நல்லாத்தான் தீனி போடறோம். கூட்டம் வர்ற நேரம் பார்த்து நீ பாட்டுக்கு லூஸ் தனமா எதுவும் கேட்டுக்



கிட்டு இருக்க வேணும். வேற வேலே இல்லையா? என்னமோ புத்தர் கணக்கா பேச வந்துட்டியே?''

மரியாதை அந்த ஆசாமியிடமிருந்து கழன்று கொள்ள, இவனிடம் பேசிக் கொண்டிருப்பதில் பயனில்லை என்பது பட்டது அவருக்கு. சொல்லவேண்டிய இடத்தில் சொல்லிச் செய்ய வேண்டிய வதைச் செய்யலாம். ஜீவகாருண்ய சங்கம்—மிருகவதைத் தடுப்பு சங்கங்களெல்லாம் எதற்காக இருக்கின்றன? இம்மாதிரிப்பட்ட அநியாயங்களைச் சுட்டிக் காட்டி நியாயம் கேட்டு வேள்வி நடத்தும் பத்திரிகைகள் எதற்காக இருக்கின்றன? இதையெல்லாமா விட்டு வைப்பது? ஏதாவது செய்யவேண்டும்... எப்படியாவது தடுக்க வேண்டும்....

'இவ்வளவு நாட்கள் ஆகியும் ஏன் இது யார் கண்ணிலும் படாமல் இருக்கிறது? இப்படியொரு சந்தடியான, இக்கட்டான, சுகாதாரமற்ற இடத்தில் இப்படியொரு மிருகக்காட்சி வைப்பதற்கு அதிகாரிகள் எப்படி அனுமதி அளித்தார்கள்? வாயில்லாப் பிராணிகளை அடைத்துப் போட்டுச் சித்திர வதை செய்கிறார்களே கொஞ்சமாவது இரக்கம் கிடையாதா? ஜீவகாருண்ய சங்கங்களெல்லாம் என்ன செய்கின்றன? அரசாங்க அதிகாரிகள், அமைச்சர்கள் யார் கவனமும் ஏன் இன்னமும் இந்த அப்பாவிப் பிராணிகளின் மீது விழவில்லை?'... ஆத்திரம் இரக்கடிதம் எழுதி ஆங்கிலப் பத்திரிகைகளுக்கு ஆசிரியர் கடிதம் பகுதிக்கு அனுப்பினார்.

டெலிபோன் டைரக்டரியை எடுத்து, 'பிராணிகள் வதைத் தடுப்புச் சங்கம்' எங்கேயிருக்கிறது என்று தேடினார். காணவில்லை. டெலிபோன் இல்லை போலிருக்கிறது' ஸ்பெஷல் இன்பர்மேஷனில் கேட்டுப்பார்த்தார். கிடைக்கவில்லை. தமக்குத் தெரிந்த தினசரி நிருபர் ஒருவரைப் போனில் பிடித்துக் கேட்டதில் விலாசம் கிடைத்தது.

ஜீவகாருண்ய சங்கத்தைத் தேடிக்கொண்டு போனதில் கஷ்டப்பட்டு இடம் கண்டுபிடிக்க முடிந்தது. வக்கீல் தொழில் பார்த்துக் கொண்டு ஒழிந்த நேரத்தில் இம்மாதிரி சமூக சேவைக்கும் தம்மை அர்ப்பணித்துக் கொண்டிருந்தவராகத் தென்பட்ட அந்த மனிதரைப் பார்த்ததுமே ராமரத்னத்திற்குக் கொஞ்சம் நம்பிக்கை வந்தது.

இவருடைய ஆவேசமும் உறுதியும் ஜீவகாருண்ய சங்கத் தலைவரை உற்சாகப் படுத்தியிருக்க வேண்டும். ''எங்களுக்கு உங்களை மாதிரி வலுவான ஆட்கள் கிடைச்சாங்கன்னு துணிஞ்சு என்னென்னவோ செய்வோம் சார். நீங்க சொல்ற மாதிரி பப்ளிக் சப்போர்ட்டும் இந்த விஷயத்துக்குக் கிடைக்கும். முதல்ல பத்திரிகைகளுக்கும் சம்பந்தப்பட்டவர்களுக்கும் நோட்டீஸ் தருவோம். அவங்க அசையலேன்னு போராடுவோம்'' — என்றார்.

ராமரத்னத்தின் முயற்சிக்கு நல்ல பலன் இருந்தது. நான்கைந்து நாட்களுக்குள் எக்ஸிபிஷனில் இருந்த அந்த மிருகக் காட்சி அகற்றப்பட்டதாகப் பத்திரிகையில் செய்தி வந்தது.

''இதபாரு தேவகி! அன்னைக்கி என்னமோ நான் அநாவசியமாப் புலம்பறதாச் சொன்னியே. இப்பப் பார்த்தியா என்னுடைய முயற்சிக்கு என்ன பலன்னு. பாவம் அந்த வாயில்லா ஜீவனுங்க பொழைச்சிப் போகட்டும்'' — என்றார்.

''இன்னைக்கு நீங்க ஆபீசுக்குக் கொஞ்சம் லேட்டாத்தான் போக வேண்டியிருக்கும்''- என்றாள் தேவகியம்மாள்.

''என்ன விஷயம்?''

''சுரேஷுக்குப் பிறந்த நாள் இல்லையா? அவன் கிளாஸ் பிள்ளைகளுக்கெல்லாம் சாக்லேட் கொடுக்கணுமாம். போடா தாத்தா வந்ததும் வாங்கி எடுத்திட்டு ஸ்கூலுக்கு வரச் சொல்றேன்னு சொல்லி அனுப்பியிருக்கேன். ஆபீஸ் போகிற வழியிலே அப்படியே போய்க் கொடுத்திட்டுப் போயிடுங்களேன்''

''நீதான் போய் வந்திடேன் தேவகி. நான் அவன் ஸ்கூலுக்கு இதுவரைக்கும் போனது கிடையாது. இப்ப புதுசா இதுக்கு மட்டும் போகணுமாக்கும்.''

''பாட்டி, தாத்தா வரலேன்னு குழந்தை ரொம்ப வருத்தப்படறது!''

பிறகு சாக்லேட் டப்பாவுடன் குழந்தை படித்துக் கொண்டிருந்த நர்சரியைத் தேடிப் போனவருக்கு எதிரில் தெரிந்த அந்தச் சின்னக் கட்டடம் கொஞ்சம் ஏமாற்றமளித்தது. மிகச்சிறிய பங்களா அது. 'கேம்பிரிட்ஜ் நர்சரி அண்ட் பிரைமரி' யென்று பெயர் மட்டும் பெரிதாக இருந்தது. டிஷூ,பிஷ்ஷூ என்று ஆங்கிலம் குழப்பமாகக் கேட்டது. எதிரிலிருந்த வகுப்பறைக்குள் தயங்கி எட்டிப் பார்த்து ''இங்கே சுரேஷ்னு எல். கே. ஜி?'' என்றதற்கு.

---

கேரளாவில் கோழிக்கோடு விருந்து வெளிவரும் 'மங்களம்' எனும் பிரபல மலையாள வார இதழ் கடந்த ஐந்து வருடங்களாக வரதட்சிணையில்லாத திருமணங்கள் நடத்தி வருகிறது. தனது பத்திரிகையில் விளம்பரம் செய்து, விண்ணப்பங்களைப் பரிசீலித்து, பெண், பிள்ளை வீட்டாரைச் சந்தித்து, திருமணம் முடியும் வரை எல்லாப் பொறுப்புக்களையும் இப்பத்திரிகை ஏற்று நடத்துகிறது.

ஏ.கே. நாசர்.



''எல். கே. ஜி.யெல்லாம் மேலே போங்க'' — என்றாள் டீச்சர். இங்கே மாடி வேறு இருக்கிறதா என்ன?

பக்கவாட்டில் மாடிப் படிகள் குறுகலாகத் தெரிந்தன. மேலே போனதில் திகிரென்றது அவருக்கு. மொட்டை மாடியின் பாதியிலிருந்து சுவர் எழுப்பப்பட்டு நான்கு அறைகள் அவசரமாய்க் கட்டப்பட்டு ஆஸ்பெஸ்டாஸ் கூரை வேயப்பட்டு நான்கு அறைகளிலிருந்தும் ஆங்கிலம் இளம்பிக் கொண்டிருக்க உத்தேசமாய் ஒரு அறையைத் தேர்ந்தெடுத்து ''இங்கே சுரேஷ்ஷு?'' என்று கேட்ட போது அறையின் மூலையில் சுரேஷ் உட்கார்ந்திருப்பது தெரிந்தது.

அந்த அறை இடுக்கமாய் இருந்தது. எட்டடிக்கு எட்டடி கூட இல்லாத சிறிய இடம். ஏழெட்டு பெஞ்சுகள் போட்டு ஒவ்வொரு பெஞ்சிலும் எட்டுப் பேர் என்ற அளவில் அங்குலம் கூட இடைவெளியில்லாமல் குழந்தைகள் ஒட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்க, கிட்டத்தட்ட எல்லாக் குழந்தைகளுக்கும் வேர்த்துப் போயிருந்தது. என்ன அனல்... என்ன புழுக்கம்... ஒரு வென்ட்டிலேஷன் கூட இல்லாமல் எவ்வளவு நெருக்கடி?

''யாரு? சுரேஷுக்கு நீங்க என்ன வேணும்?''

''மேடம் இந்த அறைக்கு வென்ட்டிலேஷன் எதுவும் கிடையாதா?'' என்றார் ராமரத்னம்.

டீச்சர் இவரை ஒருமாதிரியாய்ப்பார்க்க ''ஆஸ்பெஸ்டாஸ் கூரையிலிருந்து அனல் அப்படியே இறங்கறதே இந்தப் பாலகனுங்க தலே என்னத்துக்காகும்?'' என்றார் மறுபடியும்.

''என்ன சார்? என்ன வேணும் உங்களுக்கு? சுரேஷ் இது யாரு?'' என்று டீச்சர் மிரள,

''இந்த எட்டடிக் குச்சுக்குள்ள இத்தனை பிள்ளைங்களையும் கொட்டடியில ஆடு அடைக்கிற மாதிரி அடைச்சு வச்சிருக்கிங்களே அதுங்க அசையறதுக்குக் கூட இடமில்லாம செய்திருக்கிங்களே உங்களுக்கே நியாயமாப் படுதா?''

''இத பாருங்க சார். உங்களுக்கு ஏதாவது கேட்கணும்னு கீழே பிரின்ஸிபால் இருக்காங்க. போய்ப் பேசிக்கங்க. இங்கே எங்கிட்ட கேட்டால் நான் என்ன பண்ணட்டும்?''

ராமரத்னத்திற்கு உதடுகள் துடித்தன. ''இன்னிக்கு வெய்யில் என்ன தெரியுமா நூத்தி அஞ்சு டிகிரி... நர்சரி மான்ட்டிசோரின்ற பேர்ல கொள்ளை கொள்ளையாப் பணத்தை வாங்கிக்கறீங்க. இங்கிலீஷ். மேல்நாட்டுக் கல்வி போதனென்ற போர்வையைப் போர்த்திக்கறீங்க. குறைஞ்சபட்ச வசதி கூட இல்லாத இருட்டுக் கொட்டகையில எல்லாக் குழந்தைகளையும் போட்டுச் சித்திரவதை செய்யறீங்க. ஒண்ணுமறியாத பாலகர்களையெல்லாம் ஏன் இப்படிச் சாகடிக்கறீங்க?''



''தொடர்கதை எழுதறவரைசினிமா டைரக்டராக்கியது தப்பாப் போச்சு!''

''ஏன் இப்ப என்ன ஆச்சு!''

''இடைவேளை முடிஞ்சவுடனே முன் கதைச் சுருக்கம் போடணும்னு சொல்றாரு.''

—பாதுஷா.

இவருடைய ஆவேசம் டீச்சரை ரொம்பவும் பயப்படுத்தியிருந்தது. அவருக்கு உடம்பு பூராவும் வெடவெடத்தது. ''சார் எதுக்காக இப்படிக் கலாட்டா பண்றீங்க? உங்களுக்கு இஷ்டமில்லேன்னு தாராளமா உங்க பிள்ளையைக் கூட்டிட்டுப் போங்க. இந்த ஸ்கூல்ல சேர்க்கச் சொல்லி உங்களை யாரு கட்டாயப்படுத்தினா? வீணா இங்கே சத்தமெல்லாம் போடாதீங்க.''

இதற்குள்ளாகச் சத்தம் கேட்டுப் பக்கத்து அறைகளின் டீச்சர்களெல்லாம் வெளியில் வந்திருந்தார்கள். எல்லா வகுப்புப் பிள்ளைகளும் எட்டிப் பார்த்தன. கீழேயிருந்து யாரோ ''வாட் இஸ் தட்? வாட் இஸ் கோயிங் ஆன்?'' — என்று அதட்டினார்கள்.

ராமரத்னத்துக்கு முகமெல்லாம் வேர்த்துப் போயிருந்தது. பயந்தபடியே பக்கத்தில் வந்து நின்றிருந்த சுரேஷிடம் சாக்லெட் டின்னை நீட்டிவிட்டு எதுவும் பேசாமல் விடுவிடென்று படியிறங்கி ரோட்டில் நடக்கத் தொடங்கினார். சுரேஷை இந்தப் பள்ளிக்கு அனுப்பக் கூடாது என்ற தீர்மானம் இதற்குள்ளாக வந்திருந்தது. செய்யலாம். சுலபமான காரியம் தான். ஆனால் பிரச்னை முடிந்து போகுமா? ஒட்டுமொத்தமாய் நடக்கும் இந்த அக்கிரமத்துக்கு அது நிவர்த்தி ஆகிவிடுமா?. சுரேஷ் ஒருவன் காப்பாற்றப்படலாம். மற்றப் பிள்ளைகள்? இதே போல்தானே அடைபட்டுச் சிறைப்பட்டு வெய்யிலில் வதங்கி...

இந்தப் பள்ளியில் இடம் கிடைக்கக் குழந்தையைக் கூட்டிக் கொண்டு தன்னுடைய மனைவி நடந்த நடையும் அலைந்த அலைச்சலும் ஞாபகம் வந்த போது அவனைப்பள்ளியிலிருந்து நிறுத்துவது கூடத் தம் கையில் இல்லையென்றே தோன்றியது அவருக்கு. திடீரென்று எக்ஸிபிஷனிலே இருந்த அந்த வாயில்லா ஜீவன்களின் மீது பொறாமை வந்தது ராமரத்னத்திற்கு.



○ தில்லைவிளாகம் — ராமர்

# தோள் கண்டார் தோளே கண்டார்

**ஆனந்தி**

ரசிகமணி டி.கே.சி. யவர்கள் கம்பராமாயணத்திலிருந்து, ''தோள் கண்டார் தோளே கண்டார்'' என்ற பாடலை மடக்கி மடக்கிப் பாடி அந்தப் பாடலில் பொதிந்திருக்கும் சுவையையும்; அரிய தத்துவத்தையும் எடுத்துக் கூறியதைக் கேட்டவர்கள் அந்த அனுபவத்தை மறந்திருக்கவே முடியாது.

மிதிலாபுரியில் மான் கூட்டங்கள் வருவதைப் போலவும், மயில்கள் திரிவதைப் போலவும் அழகிய பெண்கள் ராமனைக் காண ஓடி வருகிறார்கள். அப்படியே ராமபிரானுடைய அழகில் சொக்கிப் போய் நிற்கிறார்கள். திருவின் நாயகன் திருமேனி முழுவதையும் கூட அவர்களால் காண முடியவில்லை. கோதண்டத்தைத் தாங்குகின்ற, உயர்ந்த தோளைக் கண்டவர் அதை மட்டுமே பார்த்தார்கள். கண்களை அகற்ற முடியவில்லை. செந்தாமரை போன்ற பாதத்தைப் பார்த்தவர்கள் அந்தத் திருவடிகளில் அப்படியே லயித்துப் போனார்கள். நீண்ட கரத்தைப் பார்த்தவர்களும் அதே நிலையை அடைந்தார்கள். வான் போன்ற கூர்மையான பார்வையை உடைய அந்தப் பெண்களுக்கு ஒரு மகத்தான அனுபவம் கிடைத்து விட்டது.

முதலில் டி.கே.சி.யவர்களின் குறிப்பைப் பார்ப்போம். பிறகு கம்பனின் கவிதையைப் பார்க்கலாம்.

''ராமனுடைய பூரண சௌந்தர்யத்தை அபாரமாக அனுபவித்த காரணமாகவே ஒவ்வொரு உறுப்புகளிலும் அவ்வளவு ஈடுபட்டு விட்டார்கள். எங்கும் நிறைந்த கடவுளிடத்தில் ஈடுபட்டவர்களுக்கே அந்தக் கடவுளின் அடையாள உருவங்களில் அபாரமான ஈடுபாடு உண்டாவது போல. ஒரு உருவ வழிபாட்டில், உடல் பொருள், ஆவியெல்லாம் தத்தம் பண்ணுவதென்றால் எங்கும் நிறைந்த கடவுளிடம் மிக்க ஈடுபாடு என்பதுதான் பொருள்.

இப்போது பாடலைப் பார்க்கலாம்.

தோள் கண்டார்
தோளேகண் டார்
தொடுகழற் கமலம்அன்ன
தாள்கண்டார் தாளே
கண் டார்
தடக்கைகண் டாரும்அஃ
தே;
வாள் கொண்ட
கண்ணார்யா ரே
வடிவினை முடியக்கண்
டார்?
ஊழ்கண்ட சமயத்(து)
அன் னான்
உருவுகண் டாரைஒத்தார்

ஊழ் கண்ட சமயம் என்பதற்கு ரசிகமணியவர்கள் ஆங்காங்கு ஒழுங்குபடுத்தி வைத்துள்ள சமய வழிபாடுகள் (கிருஷ்ணன் என்றும், முருகன் என்றும் வழிபடுவது சமயம்) என்று விளக்கம் தருகிறார்கள். பல தடவைகள் அவர் இந்தக் கருத்தை எடுத்துச் சொல்லுவதைக் கேட்டிருக்கிறேன். இருந்தாலும் இது புத்திக்குப் புரிந்த மாதிரி இருந்ததே தவிர, மனத்தினால் ஏற்பட்ட சுய அனுபவமாகச் சித்திக்கவில்லை. ஸ்ரீராமனின் தோள்களையும் கரங்களையும் கண்டவர்கள் அவருடைய பரிபூரண அழகைக் கண்டது எப்படி? இது ஒரு கேள்விக் குறியாகவே என் மனத்தில் இருந்து வந்தது.

திடீரென்று கொஞ்சங்கூட எதிர்பாராத சமயத்தில் இதற்கு விளக்கம் கிடைத்தே விட்டது.

தில்லை விளாகத்தில் ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியின் திவ்வியத் திருமேனியைத் தரிசிக்க நேர்ந்த போது கிட்டத்தட்ட மிதிலாபுரிப் பெண்களின் மன நிலையை அடைந்தோம். சீதாப் பிராட்டியாரோடும், லக்ஷ்மண ஸ்வாமியுடனும் வாயு



கருடாழ்வார்

குமாரனுடனும்தான் எழுந்தருளியிருக்கிறார் ராம பிரான். ஆனால் வீரக் கழலும், சதங்கையும் அணியப் பெற்ற திருவடிகளைக் கண்ட பிறகு வேறு எதையும் பார்க்க மனம் வரவில்லை. எத்தனை நேரம் பார்த்துக் கொண்டிருந்தாலும் போதாது என்று தான் தோன்றும்.

'தான் கண்டார் தானே கண்டார்' என்ற அடிக்கு விளக்கமாகத் திகழ்கிறது ஸ்ரீராமபிரானின் பாதங்கள். மிருந்த பிரயாசையுடன் கண்களை நிமிர்த்திக் கோதண்டம் தாங்கியஇடது கரத்தைப் பார்க்கிறோம்.

மறுபடியும் பெருமுயற்சி செய்து பார்வையைச் சந்திர வதனத்துக்குத் திருப்புகிறோம். முறுவல் தவழும் முகம்.

''முத்திளன் உயிரைஅம்
முறுவல் உண்டதே.''

என்று சீதை ஏன் புலம்ப மாட்டாள்? அது என்ன மோகன முறுவல்! நம் பிரமிப்பைப் பார்த்து நகைக்கிறாரா? கருணைச் சிரிப்பா? சீதையும் லக்ஷ்மணனும் அருகிலிருப்பதால் பெருமித நகையா? திகைத்து நிற்கும் போது குருக்கள் வருகிறார். 'அர்ச்சனை உண்டா' என்று கேட்கிறார்.

'சுவாமி பேருக்கே பண்ணுங்கோ' என்று கூறி விட்டு மறுபடியும் ஸ்ரீராம பிரானின் சுந்தர மணி வரைத் தோள்களையும் தாமரைக் கண்களையும் தவிப்புடன் காணச் சென்று விடுகின்றன கண்கள். ராம பிரானின் அஷ்டோத்திரம் காதில் விழுகிறது. தெளிவாகக் கூறி நிதானமாக அர்ச்சனை செய்கிறார் பட்டாச்சாரியார்.

வழக்கமாகக் கோவிலுக்குப் போகும் போது சுவாமிக்கு அணிவித்திருக்கும் ஆடையாபரணங்கள், அங்கே உள்ள விளக்குகள், அபூர்வமான மூர்த்திகள், தூண்கள், முதலியவற்றைக் கவனிப்பது வழக்கம். ஆனால் தில்லை விளாகத்தில் ஸ்ரீராம பிரான் சந்நிதியில் நின்ற போது இந்த நினைவுகள் எதுவும் வரவில்லை.

**வே**தாரண்யத்திலிருந்து தில்லை விளாகத்துக்குச் செல்ல வேண்டும். போகும் வழியில் ஒரு சிறிய சிவன் கோவில் இருக்கிறது. அதை ஔவையார் என்று அழைக்கிறார்கள். இந்தக் கோவிலில் ஔவைப்பாட்டியாருக்கு ஒரு சந்நிதி இருக்கிறது. கோவிலில் வைத்துக் கும்பிட வேண்டியவர் ஔவையார் என்பதில் சந்தேகமிருக்கவே முடியாது. தில்லை விளாகம் ரயில் நிலையமும் உண்டு.

இந்த ஆண்டு தஞ்சை மாவட்டத்தில் பிரயாணம் செய்தவர்கள் நிச்சயமாகப் பாக்கியசாலிகள். கத்தரி வெய்யிலில் கூட எல்லாக் குளங்களிலும் தண்ணீர் நிரம்பி அல்லியும் நீலோற்பலங்களும் பூத்துக் குலுங்கி யிருந்தன. வழி நெடுகப் பசுமை. வெள்ளத்தினால் மக்கள் ரொம்ப சிரமப்பட்டிருந்தால் கூட அதன் விளைவு கண்களுக்குக் குளுமையும் மனத்துக்கு இன்பமுமாகக் காட்சியளிக்கிறது. எங்களுடைய பரவசத்தை உணர்ந்த ஜீப் டிரைவர் ஜயராமன் குளத்தில் இறங்கி ஏழெட்டு மலர்களைப் பறித்து கொடுத்தார். அல்லி மலரைப் பூஜைக்கு உபயோகிக்கும் வழக்கம் இல்லை. ஆனால் நீலோற்பலம் அம்பாளுக்கு உகந்த மலர்.

ஸ்ரீராமபிரான் சந்நிதியில் பட்டரிடம் நீலோற்பலங்களைக் கொடுத்ததும் அவர் ஆர்வத்தோடு வாங்கி அம்பு வைத்துக் கொண்டிருக்கும் ராமபிரானின் கரத்தில் கொடுத்தார். அடாடா! மன்மதருபனாக இருந்தவர் மன்மதக்கோலத்திலும் காட்சி தருகிறாரே. மலர் அம்பாகி விட்டதே!

பட்டர் நம்முடைய களிப்பைப் புரிந்து கொண்டு மெல்லிய குரலில் இந்தத் தலத்தைப் பற்றிக் கூறுகிறார்:

''சுமார் 122 ஆண்டுகளுக்கு முன்னால் குளம் வெட்டப் பூமியைத் தோண்டிய போது கிடைத்த விக்ரகங்களாம். சிறிதும் சேதமில்லாமல் அப்படியே கிடைத்தனவாம். திரு. கோபால கிருஷ்ணஐயந்த வெங்கட்ராம பட்டாச்சாரியார் என்னும் அன்பர் ராமபிரானுக்கு இந்த கோவிலைக் கட்டிக்கும்பாபிஷேகம் செய்

கூத்தபிரான்



தாராம். அதனும் மூலவர் இவரேதான். ஒரே சந்நிதிதான் இருக்கிறது. புதியதாக உற்சவ மூர்த்திகளை எழுந்தருளப் பண்ணியிருக்கிறார்கள்.

பட்டர் இந்த வார்ப்பு விக்ரகங்களின் சிறப்பை எடுத்துக் கூறுகிறார்:

''கம்பர் மூன்று இடங்களில் ராமசரம் என்று குறிப்பிடுகிறார். இதுதான் ராமசரம். பிறைச் சந்திர வடிவத்தில் காணப்படும் அம்பு அல்ல இது'' என்று கூறிவிட்டு இடது புயத்தில் அன்னை கௌசலை கட்டிய ரக்ஷையையும் காட்டுகிறார். உலகையெல்லாம் ரக்ஷிக்கப் பிறந்த குமாரனுக்கு ரக்ஷை கட்டிய தாய் எப்பேர்ப்பட்ட பாக்கியசாலி!

உயிரோவியமாய் அருகில் சீதாப்பிராட்டியார். சக்கரவர்த்தியின் பத்தினியாய் பட்ட மகிஷியாய், கரத்தில் தாமரை மொட்டேந்திப் பட்டுப் புடவையும், கிரீடமும், தாடங்கமும் அணிந்து நமக்கு இன்னருள் புரியக் காட்சி தருகிறார். தாமரை மொட்டின் மீது சின்னஞ்சிறு கிளி!

அனுமனின் திருக்கோலத்தைக் காணும்படி கூறுகிறார் பட்டர். ராமனின் அழகில் லயித்த நாம் மற்ற விஷயங்களைக் காணத் தவறி விடுவோமோ என்ற கவலையோடு நமது கவனத்தை ஈர்த்துக் கூறுகிறார். ஆஞ்சநேயர் கூப்பிய கரங்களுடன் தான் காணப்படுவது வழக்கம். இங்கேயோ அடக்க ஒடுக்கமாகக் கைகட்டி வாய் புதைத்துத் தடியும் கதையுமாகக் காட்சி தருகிறார். ''உத்தரவு'' என்று கேட்பது போலத் தோன்றுகிறது.

ஸ்ரீராமபிரானின் எழிலுக்குச் சிறிதும் குறையாத அழகுடன் வில்லேந்திய கரத்துடன் காட்சியளிக்கிறார் இளையவர்.

பட்டர் நமக்குத் திருத்துழாயும், தீர்த்தமும் அளித்து விட்டு நமது சிரத்தில் திருவடிகளைச் சூட்டும் போது மெய் சிலிர்க்கிறது.

திரும்பும்போது இடது புறம் ஒரு வாசல். அதன் வழியாக உள்ளே சென்றால் தெற்கு நோக்கியவாறு நடராஜப் பெருமான் தரிசனம் தருகிறார். அருகே அன்னை சிவகாமி. வலது புறம் மாணிக்க வாசக சுவாமிகள். பேழையில் திருமுறை நூல்கள்.

வட்ட வடிவமான பெரிய திருவாசி. விரிந்து பரந்த சடை. சற்று நீண்ட திருமுகம். வீசி ஆடும் பாதம். திருவாசியின் வட்டத்திலேயே பொருந்தியிருக்கும் முயலகன். சிவப்புக் கரை போட்ட மஞ்சள் நிறச் சேலையைப் பாங்காக உடுத்திக் கொண்டு இடுப்பில் ஒட்டியாணமும் கரத்தில் குமுத மலருமாகக் காட்சி தரும் அன்னை சிவகாமி. நடராஜப் பெருமானுக்கு அர்ச்சனை செய்து விட்டுக் குருக்கள் சில விவரங்களைக் கூறுகிறார். தென்னம்பிள்ளை வைப்பதற்காகச் சுமார் 65 ஆண்டுகளுக்கு முன்னால் பள்ளம் தோண்டியபோது ஒரு பெரிய பெட்டி அகப்பட்டது. அதில் இந்த மூர்த்திகள் கிடைத்தன. நடராஜரை வைத்துக்கட்டிய கோவில். கிழக்கு நோக்கி சிவலிங்கப் பிரதிஷ்டையும் செய்திருக்கிறார்கள்.

எந்தக் காலத்தில் உருவாக்கப்பட்டதோ? எந்த மன்னர் கட்டிய கோவிலில் இருந்ததோ? ஏன் பெட்டியில் வைத்து மூடிப் பூமிக்கடியில் மறைத்து வைத்தார்களோ? அந்நியர் படையெடுப்பிலிருந்து தெய்வத் திருவுருவங்களைக் காப்பாற்றி விட வேண்டும் என்று ரகசியமாகப்புதைத்து வைத்திருக்கலாம். இந்தப் படிவங்கள் தங்கள் வரலாற்றைக் கூறினால் எவ்வளவு சுவாரஸ்யமாக இருக்கும்!

மறுபடியும் ஒருமுறை ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியைத் தரிசிக்கும் ஆவல் மிகுந்ததால் அங்கே செல்கிறோம். உலக மக்களுக்குச் சீலம் என்றால் என்ன என்று காட்டுவதற்கே பிறந்தவர்கள் ராமனும் சீதையும். புராண கதாபாத்திரங்களாக இல்லாமல் நமது வாழ்க்கையோடு ஒன்றிய தெய்வங்கள். சீதா லக்ஷ்மண ஹனுமத் சமேத ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியைத் தரிசித்து உள்ளம் குழைந்து பிரார்த்திக்கிறோம்.

ஹனுமான் சீதாபிராட்டியாரிடம் கூறியது போல,

''அந்த ராம சௌந்தரியம் என்னால்
அறிந்து சொல்லப்
போமோ அம்மா!''

என்றுதான் நமக்கும் தோன்றுகிறது.

---



இன்ஸ்பெக்டர்: ''திருடனைப் பிடிக்கக் கொடுத்ததற்காக உங்களைப் பாராட்டுகிறோம். எப்படி நீங்க தைரியமா அவனைப் பிடிச்சுக் கட்டி வைத்தீங்க?''

பெண்: ''திருடன்னே நான் நினைக்கலீங்க! லேட்டா வந்த என் புருஷன் தான்னு நினைச்சுட்டு அடிச்சுட்டேன்!''

—என். வெங்கடராமன்.

எதிர்காலம் உங்கள் கையில்



✱ குழந்தைசாமி

# நுழைவுத் தேர்வு எப்படி இருக்கும்?

இந்த வாரம் இஞ்சினீரிங் கல்லூரியில் சேர்வதற்கான விவரங்களைப் பார்க்கலாமா?

● இஞ்சினீரிங்கைப் பொறுத்தவரை, ஹையர் செகண்டரியில் முதல் குரூப் படித்திருக்க வேண்டும். 4 வருடப் படிப்பு. தமிழகம் முழுவதுமாக மொத்தம் சுமார் 3000 சீட்டுகள் உள்ளன. கணக்கில் 60சதம். பிஸிக்ஸிலும், கெமிஸ்டிரியிலுமாய்ச் சேர்த்து 60சதம் இந்த இரண்டிலும் சராசரியாய் 70 சதம் என்று குறைந்தபட்ச மார்க்கை அரசு நிர்ணயித்திருக்கிறது. ''இவ்வளவு வாங்கினால் போதாது. ஸீட் கிடைக்காது. ஏகப்போட்டி காரணமாய்'' என்று சொன்னால், ''சரிதான் போய்யா! இதை நீ சொல்லித்தான் தெரிஞ்சுக்கணுமோ!'' என்பீர்கள்!

● பாலிடெக்னிக்குகளில், டிப்ளமா படித்தவர்கள் (சிவில், மெக்கானிகல், எலக்டிரிகல், எலக்டிரானிக்ஸ் பிரிவுகளில்) கூட விண்ணப்பிக்கலாம். கடைசி இரு செமஸ்டர்களில் ஒவ்வொரு பாடத்திலும் தனித்தனியாக 60சதம் மொத்தத்தில் சராசரியாய் 70சதம் வாங்கியிருக்க வேண்டும்.

● தமிழ்நாட்டில் அழகப்பா காலேஜ் ஆஃப் டெக்னாலஜி, கிண்டி இஞ்சினீரிங் கல்லூரி இரண்டும் அண்ணா பல்கலைக் கழகத்தின் கீழ் உள்ளன. தவிர கோவை, திருச்சி, சேலம், மதுரை, நெல்லை, காரைக்குடி இங்கெல்லாம் அரசு மற்றும் தனியார் இஞ்சினீரிங் கல்லூரிகள் உள்ளன. மேலே சொன்ன கல்லூரிகள் அனைத்திலுமாக சிவில், மெக்கானிகல், எலக்டிரானிக்ஸ், கம்ப்யூட்டர் சயின்ஸ், பிரிண்டிங், லெதர், கெமிகல், டெக்ஸ்டைல் என்று சுமார் 18 வகையான பொறி இயல் 'பட்டப் படிப்புகள்' உள்ளன. இவை எல்லாவற்றுக்கும் முதல் வருடப் படிப்பு பொது. சில கல்லூரிகள் ஒவ்வொருவருக்கும் எந்தப் பிரிவு என்று முதல் வருட ஆரம்பத்திலேயே 'அலாட்' செய்து விடுவதுண்டு. வேறு சில 2-ம் வருடத்தில் மாணவர் விருப்பம், முதல் வருட மார்க் இவற்றின் அடிப்படையில் பிரிவுகளை அளிக்கும். ஆனாலும் இது ஆங்காங்கே உள்ள இடங்களின் எண்ணிக்கை, டிமாண்ட் இவற்றைப் பொறுத்ததே.

● திருச்சியில் உள்ளது பிராந்தியப் பொறியியற் கல்லூரி. இதுபோல இந்தியாவின் மற்ற பல மாநிலங்களில் இன்னும் 14 உள்ளன. இந்த எல்லாவற்றிலும் சேர்த்து, தமிழகத்துக்கான சீட் கோட்டா சுமார், 140. தமிழகத்துக்கு வெளியில் போனாலும் பரவாயில்லை. இஞ்சினீரிங் சேர வேண்டும் என நினைப்பவர்கள் இவற்றுக்கு விண்ணப்பிக்கலாம்.

● அண்ணா பல்கலைக் கழகத்துக்குத் தனி விண்ணப்பம் கிண்டியில் அண்ணா பல்கலைக் கழகத்தில்கிடைக்கும். மற்ற கல்லூரிகள் அனைத்துக்கும் விண்ணப்பம் பொது. இது ஆங்காங்கே உள்ள பொறி இயல் கல்லூரிகளிலும் அண்ணா பல்கலைக் கழகத்திலும் கிடைக்கும். ஒரே மாணவர் இரண்டுக்கும் விண்ணப்பம் அனுப்பினால், இரு அப்ளிகேஷன்களையும் இணைத்து ஒன்றாய் அனுப்ப வேண்டும்.

● இஞ்சினீரிங் அட்மிஷனில் பிளஸ்2 மார்க்குகளுக்கு 200 மார்க், நுழைவுப் பரீட்சைக்கு 50 மார்க் என்று வைத்து, மெரிட் லிஸ்ட் தயாரிக்கப்பட்டு, அட்மிஷன் தரப்படும்.

● ● ●

இந்த ஆண்டிலிருந்து, இண்டர்வ்யூவுக்குப்பதிலாக, நுழைவும் பரீட்சைவைக்கப்



போகிறார்கள். இதற்கென அரசு அமைத்துள்ள குழுவில் இடம் பெற்றுள்ள அண்ணா பல்கலைக்கழக துணைவேந்தர் திரு. வி. ஸி. குழந்தைசாமி இந்த நுழைவு தேர்வு பற்றிய விவரங்களைச் சொல்கிறார்:

''இந்த நுழைவுத்தேர்வுகளை நடத்தும் பொறுப்பு அண்ணா பல்கலைக் கழகத்துக்குத் தரப்பட்டுள்ளது. இஞ்சினீரிங், மெடிகல், அக்ரிகல்சரல் மூன்றுக்குமே தனித் தனி நுழைவுத் தேர்வுகள் உண்டு. ஆனால் நுழைவுத் தேர்வு விண்ணப்பம் மூன்றுக்குமே பொதுவானது.

முதல் குரூப் எடுத்து பிளஸ் 2 படித்தவர்கள் மூன்றுக்கும் விண்ணப்பிக்கலாம். 2-வது குரூப் எடுத்தவர்கள் மெடிக்ல், அக்ரிக்கு மட்டுமே விண்ணப்பிக்கலாம்.

இதற்கான விண்ணப்பங்களை அண்ணா ப. கழகத்திலும், கோவை, திருச்சி, நெல்லை, சேலம், மதுரை இஞ்சினிரீங் கல்லூரிகளிலும் பெறலாம். கட்டணம் ரூ. 10. விண்ணப்பத்தில் 2 பாஸ்போர்ட் சைஸ் போட்டோ ஒட்டி, பூர்த்தி செய்து 30.6.84-க்குள் அண்ணா பல்கலைக் கழகத்துக்கு அனுப்பிவிட வேண்டும்.

விண்ணப்பக் கட்டணம் தவிர, பரீட்சைக்குத் தனியாக ஃபீஸ் உண்டு. ஒவ்வொரு பரீட்சைக்கும்ரூ.10 உதாரணமாக ஒருவர் இஞ்சினியரிங், மெடிகல், அக்ரிகல்சர் மூன்றுக்கும் நுழைவுத் தேர்வு எழுதக் கட்டணம் ரூ.30. அக்ரி, மெடிகல் மட்டுமோ, இஞ்சினியரிங், மெடிகல் மட்டுமோ எழுத ரூ. 20. ஏதாவது ஒன்று எழுதினால் ரூ. 10.

நுழைவுத் தேர்வுக்கான விண்ணப்பங்கள் அனுப்பின பின், தேர்வுக்கு ஒரு வாரம் முன்பு ஹால் டிக்கெட்டுகள் அனுப்பப்படும். அதிலே ஒரு பதிவு எண்(ரெஜிஸ்டிரேஷன் நெ.) இருக்கும். அதைப் பட்டப்படிப்பு சேர்வதற்கான விண்ணப்பத்தில் குறிப்பிட வேண்டும். இது ரொம்ப முக்கியம்.

● நுழைவுத் தேர்வின் கால அட்டவணை:
ஜூலை 14-காலை 10-12.: இஞ்சினீரிங்.
14-மாலை 2.30-4.30 அக்ரிகல்சரல்,
15-காலை 10-12. மெடிகல்

● பரீட்சை மையங்கள்: சென்னை, திருச்சி, நெல்லை, மதுரை, கோவை, சேலம். பரீட்சையில் கேள்விகள் எப்படி இருக்கும்? இதோ சில டிப்ஸ்: முழுக்க முழுக்க சரியான விடையைத் தேர்ந்தெடுக்கும் அப்ஜக்டிவ் டைப் வினாக்கள் தான். மொத்தம் 120. விடையளிக்க நேரம் 2 மணி. நுழைவுத் தேர்வு விண்ணப்பத்துடன் மாதிரி வினாத் தாள், விடைத்தாள் இவையெல்லாம் தரப்படும். கேள்விகள் தமிழ், ஆங்கிலம் இரண்டு மொழிகளிலும் இருக்கும். எதிலும் விடைதரலாம்.

-சந்திரமௌலி

---

அவன்: ''என்னது! இன்னும் ஒரு மாதத்திற்கு ஏ. ஸி. ரூமில் தூங்கறதும் லேடி டைப்பிஸ்டுடன் அரட்டை அடிக்கிறதும் தான் உன் வேலையா?''

இவன்: ''ஆமா! ஒரு மாத லீவில் போயிருக்கிற மானேஜர் நான் திரும்பும் வரை நீதான் என் வேலையைக் கவனிச்சுக்கணும்னு சொல்லியிருக்கார்!''





எம்.எல்.ஏ.: ''எம். எல். ஏ. வாயிருந்தும் தொகுதிக்கு எதுவுமே செய்ய முடியாததை நினைச்சா தற்கொலை செய்துக்கலாம் போலிருக்கு எனக்கு!''

கட்சித் தலைவர்: ''அப்படியெல்லாம் எதுவும் செய்து தொலைக்காதீங்க! நீங்க செத்து இடைத்தேர்தல் வந்தாச் செலவழிக்கக் கட்சியில் இப்பப் பணமில்லே.''

—உ. ராஜாஜி.

# தேவேந்திரா சாரீஸ்

**(மிக மிக உயர்ந்த பட்டும் நூலும் கலந்து தயாரிக்கப்பட்டது)**

**27, ஏலா கந்தப்பன் தெரு, (முதல் மாடியில்)**

**(வால்டாக்ஸ் ரோடு, ப்ளு ஸ்டார் இன்டர்நேஷனல் ஹோட்டல் அருகில்)**

**சென்னை-600 003 போன்: 33113**

கிடைக்கும் இடங்கள் :

❋ "**கிருஹலக்ஷ்மி**" மாதர்கள் கூட்டுறவு அமைப்பு, B–39, சௌத் மோதிபாக், நானக்புரா, புதுடெல்லி–110 021. ❋ **M/s. காமாட்சி சில்க் ஹவுஸ்**, 5/38, W.E.A. அஜ்மல்கான் ரோடு, கரோல்பாக், புதுடெல்லி–110 005. ❋ **திருமதி உமா சுப்பிரமணியம்**, D–106, ஈஸ்ட் ஆப் கைலாஷ், நியூடெல்லி–65. போன்: 647276. ❋ **பங்கஜம் சுந்தரராஜன்**, C 6/A D.D.A. Flats, முனிர்கா புதுடெல்லி–67. ❋ Mrs. **சாரதா**, 16/449, வீரம் பில்டிங், மாதுங்கா, பம்பாய்–19. ❋ **சுசிலாமணி**, 22, காந்தி மஹால், தேஜோ கோயா பார்க், வின்சென்ட் ரோடு, மாதுங்கா, பம்பாய்–19. ❋ **லக்ஷ்மி நாராயணன்**, 5, வாணி கோ–ஆபரேடிவ் ஹவுசிங் சொஸைட்டி, வல்லபாக் ரோடு, காட்கோபர், (கிழக்கு) பம்பாய்–77. ❋ **நல்லீஸ் சில்க் சாரீஸ் சென்டர்**, 401, டெலாங் ரோடு, மாதுங்கா, பம்பாய்–19. ❋ **சௌத் இந்தியன் கன்ஸர்ன்**, 401, டெலாங் ரோடு, மாதுங்கா, பம்பாய்–19. ❋ **லதா கிருஷ்ணன்**, பிளாட் நெ. 20, காமதேனு கோ. ஆப். பெஸ்டம் சாகர், செம்பூர், பம்பாய்–89, (கிளாஸ் பாக்டரி அருகில்). ❋ **ஜெயஸ்ரீ**, 2–A, தேசப்பிரியா பார்க் ரோடு, கல்கத்தா–26. ❋ S. **பொன்னப்பன்**. 8–2–61, 2–வது பஜார், செகந்திராபாத். ❋ **திருமதி T. S. சகுந்தலா சீனிவாசன்**, 18/1–A, லால்பாக் போர்ட் ரோடு, (மினர்வா & பஸப்பா சர்க்கிள் மத்தியில்) பெங்களூர், போன்: 224357. ❋ **திருமதி துர்காம்பாள்**, 5–A, ராமச்சந்திர புரம், தென்னூர், திருச்சி. ❋ **திரு S. சேதுராமன்**, 9, பாணுதுரை சன்னதி தெரு, கும்பகோணம்–612 001. போன்: 972. ❋ **ராணி சில்க்**, 13, மஹால் 4–வது தெரு, மதுரை–1, போன்: 26295. ❋ S. **லெட்சுமி**, 24, சீனிவாசா தெரு, சேலம்–1. (டவுன் ரயில்வே ஸ்டேஷன் அருகில்) ❋ **ஸ்ரீ காமேஸ்வரி ஏஜன்சிஸ்**, 6/175, திருச்சி ரோடு, (ஆல் இந்தியா ரேடியோ அருகில்), ராமநாதபுரம், கோயம்புத்தூர்–641 018. ❋ **மகாலட்சுமி சில்க் சென்டர்**, தீன் பில்டிங், (உள்புறம்) 175/11, மேல வீதி, சிதம்பரம். ❋ **ஹேமாவதி ஏஜென்சிஸ்**, 2711, நாணயக்கார செட்டி தெரு, தஞ்சாவூர். ❋ **பாகீரதி மூர்த்தி**, 100, ஸ்ரீ வராஹபுரம் தெரு, கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலி. ❋ M/s. **சிதாராம் வேர் ஹவுஸ் சில்க் எம்போரியம்**, M.O. ரோடு, திருச்சூர்–680 002. ❋ S. **சுந்தரம்**, 9, சாத்தான் கோவில் தெரு, வடிவீச்வரம், நாகர்கோவில்–2. ❋ **திருமதி K. சீதாலட்சுமி**, 41, 4–வது டிரஸ்ட் கிராஸ்தெரு, மந்தைவெளிப்பாக்கம், சென்னை–28, போன்: 73244. ❋ **திருமதி சாவித்திரி பாலசுப்பிரமணியம்**, 2, 7–வது தெரு, நங்கநல்லூர், சென்னை–61, (பிள்ளையார் கோவில் அருகில்) போன்: 433737. ❋ **திருமதி சரோஜா கிருஷ்ணமூர்த்தி**, A9/386, புதிய குடியிருப்பு (முதல் மாடி) குடிசை மாற்று வாரியம், திருமங்கலம், அண்ணா நகர் மேற்கு, சென்னை–600 107. (திருமங்கலம் பஸ் நிலையம் அருகில்).

---

**குறிப்பு :** சென்னை நகரில் எந்தக் கடைகளுக்கும் எங்கள் புடவைகள் சப்ளை கிடையாது. மற்ற இடங்களில் வாங்குவது எங்களுடைய தயாரிப்பு அல்ல.

வேதனைக் (நிஜமான) கதை

# அடித்துத் துரத்தப்பட்ட 57 குடும்பங்கள்

**1984**—மார்ச் —29—ம் தேதி இரவு எட்டு மணி. தி. நகர் ராமச்சந்திர ஐயர் தெருவிலுள்ள முத்துரெட்டி தோட்டம். சில குடும்பங்களில் சமையல் ஆகிக் கொண்டிருக்கிறது. சிலர் சாப்பிட்டு விட்டுப் படுக்கும் நேரம். திடீரென்று இரண்டு போலீஸ் லாரிகள் வருகின்றன. திபு,திபுவென்று போலீஸ்காரர்கள் இறங்குகிறார்கள். போலீஸ் உயர் அதிகாரிமக்களிடையே சொல்கிறார்:

''உடனே எல்லாப் பொருட்களையும் எடுத்துக் கொண்டு வெளியேறிவிடவும். நாங்கள் குடிசைகளை இடிக்கப் போகிறோம்'' எதிர்பாராத இந்தச்சூழ்நிலையைக் கண்டு அங்கு இருக்கும் ஆண்கள், 'என்ன காரணத்தினால் எங்களை வெளியேற்றுகிறீர்கள்; எங்களுக்கு எந்தவித முன்னறிவிப்பும் கொடுக்கவில்லை; நாங்கள் திடீரென்று எங்கு செல்வது என்று கேட்கவும், ஆத்திரம் வந்து விட்டது போலீஸ் அதிகாரிக்கு. உத்தரவு போட்டவுடன் போலீஸ்காரர்கள் லட்டியை கொண்டு எல்லோரையும் அடித்து விரட்டியதையும் அதில் எட்டு பெண்கள் காயப்பட்டதையும், நாற்பது வருடங்களாகக் குடியிருந்த தங்கள் வீடுகள் அந்த நள்ளிரவிலேயே, டிராக்டர், புல்டோசரின் (விவசாயத் துறையைச் சேர்ந்தவை) உதவியுடன் தரைமட்டமானதையும், இன்று அதே தெருவில் பிளாட்பாரத்தில் வசிக்கும் மக்கள் கண்ணீரும் கம்பலையுமாய் நினைவு கூர்கிறார்கள். அதற்கப்புறம் குடிசைப் பகுதி மாற்று வாரியத் தலைவர் திருமதி சுலோசனா சம்பத்தை சந்தித்துசொல்லியிருக்கிறார்கள். ''நீங்கள் சொல்வது சினிமாவில் வருவது போலிருக்கிறது. நீங்கள் ஏன் காலி செய்தீர்கள்?'' இவ்வாறு கேட்டாரே தவிர அந்தக் குடிசை வாசிகளுக்கு எந்த உதவியும் கடந்த மூன்று மாதங்களாக செய்ய முன்வரவில்லை. இத்தனைக்கும் அந்தப் பகுதி குடிசை வாரியத்தால் Notified area — வாக அறிவிக்கப்பட்ட பகுதி. வாரியம் அங்கே வீடு கட்டுவதற்காகக் குடும்பங்களின் புகைப்படங்களை எடுத்துக் கொண்டு சென்றிருக்கிறது.

இவர்கள் இப்படி அடித்துத் துரத்தப்பட்டதற்கு என்ன காரணம்? இவர்களில் பலர் தாம்பரம் பக்கத்திலும், அதற்குஅப்பாலும்வீடுகளைக் கட்டி வாடகைக்கு விட்டிருப்பவர்கள். இங்கு வந்து ஆக்கிரமிப்பு செய்து அனுபவ பாத்தியதை கொண்டாட நினைக்கிறார்கள் என்று கூறுகிறார். இந்த வட்டாரத்திலேயே வாழும் ஒரு பெண்மணி, சரியான கல்வியறிவு இல்

ப பிளாட்பாரத்தில் சமையல்



லாத இவர்களுக்கு இன்று உதவிக் கொண்டிருக்கும் மார்க்சிஸ்ட் கட்சித்தொண்டர்களோ, வேறுவிதமாகக் கூறுகிறார்கள்: ''மொத்தம் பதினான்கு கிரவுண்டில் இந்த மக்கள் வசித்து வந்தார்கள். பெரும் பகுதி புறம்போக்கு. இரண்டு கிரவுண்டு மட்டும் தான் ஒரு தனி மனிதருக்குச் சொந்தமானது. அதற்காக அந்தத் தனி மனிதர் நீதிமன்றத்துக்குப் போனார். அவருக்குச் சாதகமாகத் தீர்ப்பு வந்தது. மக்கள் அப்பீலுக்குச் சென்றார்கள். அதற்குள் இது குடிசை மாற்று வாரியத்தில் பதிவு செய்யப்பட்ட பகுதியாக அறிவிக்கப்பட்டதால், வாரியத்தின் ஒப்புதல் இன்றிக் குடிசைகளை அகற்ற முடியாது என்று தீர்ப்பளிக்கப்பட்டது. இது நடந்தது 1976—ல். அதற்கப்புறம் தி. நகரில் ஒயின் கடை நடத்தி வரும் அ.தி.மு.க. நபர் ஒருவரும், எந்தக் கட்சியையும் சாராத ஆனால் எல்லாக் கட்சியினரையும் வளைத்துப் போட்டுக் கொண்ட புரோக்கரான ஒரு நபரும் (எம். ஜி. ஆர். என் பைக்குள் என்கிறாராம்) கோர்ட்டில் கேஸ் போட்ட அந்தத்தனி மனிதருடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டனர். ''இவர்களை நாங்கள் துரத்தி வெளியேற்றி நிலத்தை எடுத்துக் கொள்கிறோம். எட்டு லட்சம் தருகிறோம்'' என்று கூறி முன் தொகையாக இரண்டு லட்சத்தைக் கொடுத்து விட்டுப் போலீஸ் துணையுடன் இவர்களை விரட்ட ஆரம்பித்துள்ளார்கள்.

வெளியேற்றப்பட்டபின், 1976 நீதிமன்ற தீர்ப்பைச் சுட்டிக் காட்டி மறுபடி தடையுத்தரவு வாங்கியும், தங்க அனுமதிக்கவில்லை.

''இதுவரைமூன்று முறை உள்ளே செல்ல முயன்றோம். இந்த மக்கள் மீது போலீஸாரை விட்டுத் தாக்குதல் நடத்தியிருக்கிறார்கள் அந்த ரவுடிப் பிரமுகர்கள். எங்களில் ஒருவருக்குக் கையொடிந்து விட்டது. ஒருவருக்கு காலில் பலத்த காயம். இருபது, முப்பது ரவுடிகளை அந்த இடத்தில் காவலுக்கு வைத்திருக்கிறார்கள். ஊர்வலம், கமிஷனரிடம் மனு, முதல்வருக்கு மனு,பொதுக் கூட்டம், எல்லாம் போட்டாகி விட்டது. ஒரு வழியும் பிறக்கவில்லை. தி. நகர் பிரமுகரும், அந்த புரோக்கரும் பணத்தால் எல்லோரையும் சரிக்கட்டி விடுகிறார்கள். அதேசமயம் ரவுடிகளையும் போலீஸையும் விட்டு, ஒன்றும் தெரியாத இந்த அப்பாவிகளை அடித்து அடித்து விரட்டுகிறார்கள். கடந்த மூன்று மாதங்களாகவெய்யிலிலும், தற்போது மழையிலும் தவித்துக் கொண்டிருக்கும் இந்த மக்களின் துயரம் நீங்காதா? நியாயம் பிறக்காதா?''

அனுதாபத்துடன் கூடிய கம்யூனிஸ்டு தோழரின் இந்தப் பேச்சு இந்தியாவில் சாலையோரத்தில் வாழும் எத்தனையோ மக்களைநமக்கு நினைவூட்டினாலும் நேற்று வரை ஒரு கூரையின் கீழ் வாழ்ந்து இன்று வெளியேற்றப்பட்டுத் தவிக்கும் இவர்களைப் பார்க்கப் பரிதாபம் மேலிடத்தான் செய்கிறது.

—நமது நிருபர்

படம்: மனோ

---



புகழேந்தியை மட்டம் தட்டுவதற்கு எண்ணிய ஒட்டக்கூத்தர், ''எங்கள் சோழ அரசன் முதுகுக்குக் கவசம் கட்டுவது இல்லை. ஏன் தெரியுமா? அவன் பெரிய வீரன்'' என்று ஆணவத்தோடு பேசினார். உடனே, புகழேந்தி, ''உங்கள் சோழன் முதுகுக்குக் கவசம் போடாமல் இருப்பதன் ரகசியம் எங்கள் பாண்டியன் மீதுள்ள நம்பிக்கைதான். புறமுதுகு காட்டி ஒடுபவர்கள் மீது பாண்டியன் வேல் எறிய மாட்டான்!'' என்று சுடச்சுடப் பதில் சொன்னதும் ஒட்டக்கூத்தன் முகத்தில் ஈயாடவில்லை.

—தகவல்: கவியரசுதாசன்.

---

ஜெர்மனியில் ஒரு பிரபல வாசனைத் திரவிய கம்பெனி '4711' — என்ற பெயரில் செண்ட் ஒன்றை தயாரிக்கிறது. இதே '4711'— என்ற எண்ணைத் தமது காரின் மீது பெரியதாக எழுதிக் கொண்டிருந்த நபர் ஒருவர் மீது இந்த கம்பெனி வழக்குத் தொடர்ந்தது. ''இது என்னுடைய டெலிபோன் நம்பர். இதை என் கார் மீது எழுதிக் கொள்வதில் என்ன தவறு?'' என்றார் அவர். ''இது எங்கள் வியாபாரத்தைப் பாதிக்கிறது!'' என்றார்கள் கம்பெனிக்காரர்கள். காரணம் அந்தக் காரின் சொந்தக்காரர், சாக்கடை சுத்தம் செய்யும் ஒரு தொழிலாளி!

ஆதாரம்: தி வீக், தகவல்: நாகை. பொன்னி.



## வாழ்க்கை வரலாறு

கோடீஸ்வரியாகப் பிறந்து ஆன்மீகத்துக்குத் தொலை தூரத்தே இருந்தவர் ஸ்ரீமதி இந்திரா. இந்தப் பஞ்சாபி பெண்மணி தமிழகப் புதுவையில் வங்க தாதா (அண்ணன்)வின் சிஷ்யையாகி நீதி என்று தமக்கையாக அனைவராலும் அன்பு செலுத்தப்பட்டார். தம்மில் மிக்காள் என்று தாதாவே கூறுமாறு திவ்வியானுபவங்களில் திளைத்தார். இன்று மா (அம்மா) வாக புனாவிலிருந்து புனிதம் பெருக்குகிறார். ராஜஸ்தானத்து அந்நாளைய மீரா இன்றைக்கும் இந்திரா நீதி மூலம் பாடல்களை யாத்துத் தருகிறார்! இந்திரா தேவியின் அதிசய வாழ்க்கை வரலாறு நூலிலிருந்து சில பகுதிகள் இங்கு தரப்படுகின்றன. ஆங்கில மூலம்: திலீப்குமார் ராய்; இந்திரா தேவி. தமிழாக்கம்: ரா. கணபதி. பிரசுரம்: கலைஞன் பதிப்பகம், 10, ஹென்ஸ்மான் ரோடு, சென்னை-600 017. விலை: ரூ. 32.



○ இந்திராதேவி

அதிகாலை சுமார் மூன்று மணி இருக்கலாம். இந்திரா கனவு கண்டாள். கனவிலே அவள் சீட்டுக்களை அடுக்கி வீடு கட்டினாள். சூழலில் ஓர் ஆழ்ந்த அதிர்வு ஏற்பட்டது. சீட்டு வீடு குலைந்து விழுந்தது. ஆனால் என்ன ஆச்சர்யம்! விழுந்தது சீட்டல்ல; தன் மாமிமார்களில் ஒருத்தி அவளது குழந்தையின் தூளியின் மீது குனிந்து கொண்டிருப்பதைப் பார்த்தாள். இந்திராவைப் பார்த்ததும் அவள் ''படுக்கப்போ! இந்த வேளையில் என்ன விஷமத்துக்கு ஆயத்தமாயிருக்கிறாய்?'' என்று இரைந்தாள்.

இந்திரா பதிலுக்குக் கத்தினாள். ''வெளியே வாங்கோ மாமீ! வந்தே

# இந்திராவுக்குள் மீரா

...கள்ளும் காரையுமே ஆகும்! ஒரு தெளிவான பெண் குரலை அவள் கேட்டாள்! ''உடனே எழுந்திருந்து வெளியே போ!'' மீண்டும் மீண்டும் இவ்வாசகம்கூறப்பட்டது. நிர்ப்பந்தம் தாங்காமல் அவள் படுக்கையை விட்டெழுந்து வராந்தாவை நோக்கி ஓடும் வரை கூறப்பட்டது. அங்கிருந்து அவள்

○ திலீப்குமார் ராய்



ஆகணும். பயங்கரமா என்னவோ நடக்கப் போறது.''

மாமியின் பதிலுக்குக் காத்திராமல் அவள் ஓடினாள் — பாதாம் தோப்பைத் தாண்டி டென்னிஸ் கோர்ட்டை நோக்கி. ''லானி''ல் அவள் கால் வைத்த அடுத்த விநாடி ஒரு பீதிகரமான நிலநடுக்கம் உண்டாயிற்று. பயப்பிராந்தியுற்ற அவளது கண்களின் முன்னால் ஒரே நிமிஷத்துக்குள் அந்த வீடு முழுவதும் இடிந்து சரிந்து விழுந்தது. சுற்றிலும் ஒரே புழுதிப் புயல், அழுகையொலி! அலறல்தான்! ஒன்று அவள் மனத்தில் ஆழப் பதிந்திருக்கிறது. இத்தனை ஸர்வநாச இடிபாட்டில் ஒரே ஒரு கண்ணாடிப் பெட்டகம் மட்டும் அதிலிருந்த பெல்ஜியம் கண்ணாடியுடன் உடையாமலிருந்தது!

• • • •

சிற்றின்பத்தைப் பொறுத்த மட்டில் இந்திரா அஸாதாரணமானவளாக இருந்தாள். இயல்பாக இருபாலாருடனும் ஸ்நேஹம் செய்து கொண்டு நண்பர்களை வெகு ஆழமாக நேசித்தாளாயினும் சித்

றின்பம் என்றும் கட்டோடு அருவருத்தாள். யாராவது தன்னைத் தொடுவதாக எண்ணினாலே கூசி வெடவெடப்பாள். கல்யாணத்துக்குப் பிறகு கணவரை மதுரமாக நேசித்தாள்; ஆனாலும் மனைவியாக அவருடன் வாழ்வது அவளுக்குத் தாங்க முடியாத ஒன்றாக இருந்தது. கணவரைத் தவிர இன்னொரு ஆடவரிடமும் அவளுக்கு மிகுந்த அளவில் தூய பிரியம் இருந்தது. ஏனெனில் இந்த ஒரு நபர்தான் தன்னையறியாமலே அவளுடைய பிரச்சினையை உள்ளவாறு புரிந்து கொண்டு அவள் விதித்த நிபந்தனைகளுக்கு உட்பட்டு அவளை நேசித்தார்.

இந்தச் சிற்றின்ப வெறுப்பு அநேக சீர்குலைவுகளை வீட்டில் உண்டாக்கி அவளுக்கு நிரம்பவும் இதய வேதனை கொடுத்தது. ஆண் நண்பர்களின் ஸஹவாஸத்தை வரவேற்று அவர்களோடு சிரித்து ஜோக் அடிக்கிற ஒருத்தி எப்படி அதில் பாதி வழியில் ஒரு கோட்டைக் கிழித்து ''இது வரைதான்; இனியும் வர வேண்டாம்'' என்று சொல்ல முடியுமென்று அவளைச் சுற்றியிருந்தவர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. தன்னுடைய இம் மனப் போக்கினால் தான் பிறரைவிட உயர்ந்தி என்றோ தாழ்ந்தி என்றோ அவள் நினைக்கவில்லை. தான் மற்றோருக்கு வித்யாஸமாக இருப்பதை மட்டும் புரிந்து கொண்டிருந்தாள்.

● ● ● ●

1945 இந்திராவுக்கு மணமாகி ஏழாண்டுகளும் பிள்ளை அதில் பிறந்து ஐந்தாண்டுகளும் ஆகிவிட்டிருந்தன. இப்போதிலிருந்து தொடங்கிய நிகழ்ச்சிகள்தாம் அவளது வாழ்க்கையின் போக்கையே முற்றிலும் மாற்றின. இவற்றில் ஒன்று — அவள் சற்றும் முக்கியத்துவம் கொடுக்காத ஒன்று — அவளுக்குப் பிறருடைய எண்ணங்களை அறியும் சக்தி உண்டானது. முதலில் இது ஏதோ குருட்டாம்போக்காக நிகழ்வது அல்லது தன்னுடைய கற்பனை என்று அவள் ஒதுக்கப் பார்த்தாள். ஆனால் பிற்பாடு இது மெய்தானா என்று மீண்டும் மீண்டும் சோதித்துப் பார்த்ததில் வாஸ்தவமாகவே தனக்கு இந்தச் சக்தி ஏற்பட்டிருக்கிறது என்று ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. இதற்காக அவள் தன்னைக் குறித்தே வெட்கந்தான் கொண்டாள். எவரோ ஒருவரது எண்ணம் அவளுக்கு முன்னே தன்னை திறந்துகாட்டிக்கொள்ளும் ஒவ்வொரு முறையும் மூன்றாம் மனிதரொருவரின் குளியலறைக்குள் எட்டிப் பார்க்கும் வெட்கமே அவளுக்கு உண்டாகும். தன் அத்யந்த ஸகி லாட்லி தவிர வேறெவருக்கும் சொல்லாமல் இந்த இடைஞ்சலான உண்மையை இந்திரா தன் மனதுக்குள்ளேயே பூட்டி வைத்துக் கொண்டாள்.

''சிலுக்கைக் கதாநாயகியாகப் போட்டு பாலசந்தர் படம் எடுத்தால் என்ன பெயர் வைப்பார்?''
''கூச்சமில்லை, கூச்சமில்லை.''
வி. ஜெயராமன்.



● ● ● ●

பேரிருளும் தன்னந்தனிமையும் தொடர்ந்து அழுத்தின. மீண்டும் குரல் கேட்டாள்: ''நீ இதற்காகவா வந்திருக்கிறாய்? நீ இதற்காகவா வந்திருக்கிறாய்? எதற்காக நீ வந்திருக்கிறாய்?''

குரல் சற்று ஓய்ந்தது. பிறகு அதே வாக்கியத்தை மீண்டும் கூறிற்று.

நல்லவேளையாக இந்திரா வீடு சேர்கிற போது யாவும் ஸரியாக ஸஹஜமாக ஆகிவிட்டன.

இதிலிருந்து திடீர் இருள் சூழத் தடுமாற்றமும் குரல் கேட்பதும் நெருங்கி நெருங்கி வரும் இடைவெளிகளில் உண்டாகத் தொடங்கியது. மிகவும் அடிக்கடி அவை ஏற்பட்டதில் அவள் ஏறக்குறைய வெறுத்தே போனாள். ஆயினும் ஸஹஜ வாழ்விலும் பொதுப் பணியிலும் ஈடுபாடு இழக்காமல் இருந்தாள். மீளமீள ஏற்பட்ட அநுபவம், தன் விஷயமாக மிகவும் விநோதமான என்னவோ ஒன்று நடந்து கொண்டிருக்கிறது என்று அவளைத் திடமாக எண்ண வைத்தது.

டாக்டர்களைக் கலந்தாலோசித்தாள். மனோதத்துவ மருத்துவர் அவள் இன்னொரு குழந்தைக்குத் தாயாக வேண்டுமென்று கூறினார். அப்போது அமிதுக்கு எட்டு வயசு. டாக்டர் கூறியதை ஏற்குமாறு கணவரும் வாதித்தார். அநாதையில்லம், தொழு நோயாளியர் இல்லம், கதியற்ற பெண்கள் கைத்தொழில்கள் கற்றுக் கொள்ளும் பள்ளி, பெண்களின் சாரணப் படை, மாதர் சங்கம் ஆகிய வெளிக்காரியங்களிலேயே எப்போதும் ஈடுபட்டிருந்த அவளுக்கு வீட்டுப்பிணைப்பு அவசியமென்பது கணவரின் கருத்தாயிருந்ததால் மனோதத்துவ மருத்துவரின் யோசனையை அவர் வெகுவாக ஆதரித்தார். வீட்டையும் நன்றாகத்தான் பார்த்துக் கொள்கிறாளென்பது மட்டும் போதாது என்றார். அநாதைகளையும், அசதிகளையும் அன்பு செய்வேனென்பதோ தமக்கு அடியோடு அர்த்தமாகவில்லை என்றார். ''அம்மாடி! 'சாரிடி பிகின்ஸ் அட் ஹோம்' முதலில் உன் அசமுடையானையும், அசத்து மருமக்களையும் அன்பு செய்வதில் ஆரம்பி. அப்புறம் வெளியாருக்கு விநியோகம் செய்து கொண்டு போவாயாம்'' என்றார்.

● ● ● ●

அன்று 1946 அக்டோபர் 7. அவள் ஒரு கல்லூரி ஸமூஹ விழாவுக்குத் தலைமை தாங்க வேண்டிய நாள். விழாவின் சிறப்பு விருந்தாளி ஸ்ரீ திலீப்குமார் ராய் — புகழ் கொண்ட பாடகர், எழுத்தாளர், ''பொற்குரல் காரர்'' என்று அவரைப் பற்றிக் கல்லூரித் தலைவி இந்திராவுக்குக் கூறியிருந்தார். ஸ்ரீ ராயைப் பற்றி அவள் கேள்விப்பட்டிராவிடினும் பொதுவாக ஸங்கீதத்தை ஆவேசமாக ரஸித்தவளாதலால் விழாவில் கலந்து கொள்ள ஸம்மதித்தாள்.

துரதிர்ஷ்டவசமாக அந்த ஏழாந்தேதியன்றே அவள் ஆஸ்த்மா பாதிப்புக்கு ஆளாகிக் கடும் காய்ச்சலில் விழுந்தாள். அவள் விழாவுக்குப் போவதற்கில்லை என்றாயிற்று. ஆயினும் அன்று பிற்பகல் அவரைப் பார்க்க வேண்டும் என்று அவளுள் ஒரு மகத்தான உந்துதல் இருந்தது. காரணம் புரியாத, ஆனால் தடுத்து நிறுத்த முடியாத உந்துதல். அகத்துக்காரரிடம், ''அந்தப் பெரியவரைப் பார்க்க ரொம்பவும் ஆசையாயிருக்கிறது. அவரை தயவு செய்து இங்கே 'இன்வைட்' செய்யுங்களேன்'' என்றாள்.

அகத்துக்காரர் ஆச்சரியமுற்றார். ''உன் காய்ச்சல் நிஜமாகவே மிகவும் முற்றி ஜன்னி கண்டிருக்கிறது'' என்றார்.

ஆனால் இந்திரா விட்டுக் கொடுப்பவளாயில்லை. ஸ்ரீ டி. கே. ராயைத் தங்கள் வீட்டுக்கு விஜயம் செய்யுமாறு கேட்டுக் கொள்ளும்படி கல்லூரித் தலைவிக்கு அவள் ஒரு கடிதம் எழுதினாள். கடிதத்தைத் தன் இளைய மைத்துனன் மூலம் அனுப்பி வைத்தாள்.

மாலை ஏழரை மணியிருக்கும். யாரோ உள்ளே வந்து இந்திராவைக் கவனித்துக் கொண்ட நர்ஸிடம் ஏதோ கிசுகிசுத்தார். இதற்குள் கணவர் உள்ளே வந்தார். ''பிடித்தபிடி ஸாதித்து விட்டாய் இந்திரா! உன்னைப் பார்க்க ஸ்ரீ திலீப்குமார் ராய் வந்திருக்கிறார். உள்ளே அழைத்து வரவா?'' என்றார்.

இந்திரா கதகதப்பான சால்வையைப் போர்த்திக் கொண்டு 'ஸிட்டிங் ரூம்'க்கு வந்தாள். இரண்டு நண்பர்களுக்கு நடுவில் ஸ்ரீ ராய் ஒரு ஸோபாவில் அமர்ந்திருந்தார். இந்திரா நுழைந்ததும் அவர் எழுந்திருந்து நின்றார்.

ஒரு மின்சார ஓட்டம் அவளுடைய முதுகுத் தண்டின் அடியிலிருந்து புறப்பட்டுக் கழுத்துக்குக் குபீரெனப் பாய்ந்தது. அவரை நோக்கிக் கரம் குவித்து விட்டு அமர்ந்தாள். அவளுள் ஆழப் பதிந்த முதல் விஷயம் அவரது முகத்தில் நிலவிய தூய்மைதான். அதிஸுந்தரமான அம்முகத்தில் மனப்பூர்வ ஈடுபாடு, ஆன்ம பலம் ஆகியவற்றின் முத்திரை இடப்பட்டிருந்தது.

● ● ● ●

தாதாவின் இரண்டாவது விஜயத்துக்குப் பின், இந்திரா இருளிலிருந்து தன்னை விடுவிக்குமாறு கோரி அவருக்குப் பல கடிதங்கள் எழுதினாள். ஒவ்வொரு முறையும் அவர் மறுதலித்தே பதில் போட்டார். தம்மை விடத் தம்முடைய குருவான ஸ்ரீ அரவிந்தரிடமே அவள் திரும்ப வேண்டுமென யோசனை கூறி, அரவிந்தாச்ரமத்துக்கு வருமாறு அவளுக்கு நல்லுரை எழுதிக் கொண்டிருந்தார்.

அன்னையின் பிறந்த நாளான பிப்ரவரி 21-ந்தேதி ஸ்ரீ அரவிந்தர், அன்னை ஆகிய இருவரையும் இந்திரா முதன் முறையாகத் தரிசித்தாள். தான் வெகு பாக்யசாலி என மகிழ்ந்தாள். அவளுடைய உடல் முழுவதும் குளிர்ந்து மரத்துப் போயிற்று.

அடுத்த நாள் காலை ஸ்ரீ அரவிந்தருக்கு தாதா ஏதோ எழுதியனுப்பினார். ஸாதகர் ஒருவர் மூலம் ஸ்ரீ அரவிந்தர் பதில் ஸந்தேசம் அனுப்பினார். ''அவள் யோக ஸாதனைக்குப் பக்குவமாயிருக்கிறாள். நாங்கள் (அதாவது ஸ்ரீ அரவிந்தரும், அன்னையும்) அவளைச் சிஷ்யையாக ஏற்க விருப்பமாயிருக்கிறோம்'' என்பதே செய்தி. தாதாவுக்கு ரொம்பவும் ஸந்தோஷம்.

● ● ● ●

''தாதா, த்யானம் பற்றிச் சொல்லுங்கள். இங்கே எல்லோரும் அதைப் பற்றி நிறையச் சொல்கிறார்கள். எனக்கோ எதுவும் தெரியவில்லை'' என்றாள்.

''ஆண்டவன் படத்தின் முன்னால் ஸௌகரியமான ஒரு ஆஸனத்தில் உட்கார்ந்து கொள். திருவுருவத்தின் குறிப்பிட்டதொரு பாகத்தில் கவனத்தை மையப்படுத்த முயற்சி செய். வெளியேயிருந்து எண்ணங்கள் வரும். அந்த விரும்பத்தகாத குறுக்கீட்டுக்காரர்களை விரட்டு. ஒதுங்கி நின்று கவனி. மனத்தின் சஞ்சலத்தோடு உன்னை ஐக்கியப்படுத்திக் கொள்ளாதே. (மனத்தின் சஞ்சலத்தை உன்னுடைய உண்மையான ஆத்மாவுக்கு ஏற்பட்ட ஒன்றாக நினைக்காதே) எண்ண ஓட்டங்களுக்கு நீ இடம் கொடுக்காவிடில் அவை கால க்ரமத்தில் தெறித்து விழுந்து விடும். மனம் மௌனமுறும்; இந்த மௌனத்தினுள் மௌனத்தின் வழியே ஈச்வர க்ருபை இறங்கி வரும்.''

● ● ● ●

தனிமையில் வெறித்து விடப்பட்ட ஏக்கத்துடன் தாதா சொன்னபடி த்யானம் செய்ய முயல்வதற்காக மறுநாள் காலை அமர்ந்தாள். அப்போது மணி எட்டு. ஒன்பதரைக்கு அவளுக்கு ஒரு மீட்டிங் இருந்தது. கதவைத் தாழிட்டு விட்டுத் தன் அறையில் சப்பணமிட்டு உட்கார்ந்தாள். சில நிமிஷம் குருவுக்குப் பிரார்த்தனை செலுத்தினாள். அப்புறம்... அவள் கண்ணை மூடிக் கொள்ள, விந்தைகள் நடந்தன. அவளது முதுகுத் தண்டின் அடியிலிருந்து ஒரு மின் ஓட்டம் அப்படியும் இப்படியுமாக மேலேறிற்று. பனிப்பாறை போல் சாந்தி அவள் தலைமீது இறங்கிற்று. உடம்பு மரத்தது. எண்ணமில்லை. பிரார்த்தனை இல்லை. 'பரவசம்' என்று உணர்ச்சிபூர்வமாகச் சொல்ல எதுவும் இல்லை. மௌன

அமைதியொன்றே நிலவியது. அப்புறம் என்ன ஆச்சு என்று அவனுக்குத் தெரியவில்லை. அடுத்து அவன் அறிந்தது யாரோ அவனைக் குலுக்கியதுதான். கடிகாரத்தைப் பார்த்தான். கிட்டத்தட்ட பிற்பகல் இரண்டு மணி!

பிரமிப்பில் எழுந்திருந்தான். அகத்துக் காரியங்களைக் கவனிக்கலானான். ஆயின், யாவுமே அழுத்தமற்றவனவாயும், முக்கியமற்றனவாயும் தோன்றின. பேசாமல் சும்மா உட்கார்ந்திருக்க வேண்டும் என்ற தூண்டுதல் அவனை இறுகப் பிடித்துக் கொண்டது. பேசுவதற்கும், வேலை செய்வதற்கும் எதிலாவது அக்கறை கொண்டிருப்பது போல் நடிப்பதற்கும் கூட அவன் ரொம்பவும் சிரமப்பட வேண்டியிருந்தது. இப்படிப்பட்ட போதை நிலை அல்லது கடவுட்பித்து அவனை மூன்று மாதங்கள் ஆட்கொண்டிருந்தது. காரணமற்றதொருசாந்தம் அவனுள் குடிப்புகும். நாட்கணக்கில் அது நீடிக்கும். பிற்பாடு வந்த கருக்கிலேயே சூன்யமாக விலவிலத்து விழும் —தனிமை ஏக்கப் பாழுங்கிணற்றில் அவனைத் தள்ளி விட்டு. அவனறிந்த உலகியல் இன்பங்கள் யாவற்றையும் விட அந்த சாந்தி எப்படி மிகமிக உயர்ந்ததாயிருந்ததோ, அவ்வாறே இந்த வேதனையும் அவன் இதுகாறும் அனுபவித்திருந்த நோவுகள் எல்லாவற்றையும் விட மிகமிக அடர்த்தியாயிருந்தது.

ஒரு விதமாக விழித்துக் கொண்டே தூங்கும் நிலை தனக்கு மெல்ல வாய்ந்து வருவதை இச்சமயத்தில் உணர்ந்தான். ஒரு நாளில் நாலைந்து மணி கூட அவனுக்குத் தூக்கம் கொள்ளவில்லை. அப்போதுங்கூட அவனின் ஒரு பகுதி விழித்துக் கொண்டேயிருந்தது. சின்னஞ்சிறு சந்தடிகளைக் கூடத் தூக்கத்திலேயே அவனால் காணவும் உணரவும் முடிந்தது.

குரு எங்கோ தொலை தூரத்திலிருக்க, இப்படிப் புதுமை புதுமையாகத் தனக்கு என்னென்னவோ நடக்கின்றனவே என்று எண்ணினான். இதற்கெல்லாம் அர்த்தமுண்டு என்பதோ, அதை விளக்குவதற்கே குரு மிகவும் துணை புரிகிறாரென்பதோ, சிஷ்யரின் நிலை அவருக்குத் தெரியுமாதலால் அவர் வழிகாட்டி, கட்டிக்காத்து, லக்ஷ்யத்தைச் சிஷ்யருக்கு உறுதிப்படுத்தித் தருவாரென்பதோ அவனுடைய அறியாமைக்குத் தெரியவில்லை.

குறிப்பிட்ட நியமம், க்ரமம், ஸம்ப்ரதாய பூர்வமான ஆஸனம் முதலிய எதையும் அவன் அநுஸரித்தானில்லை. சும்மா தன்னை ஈசனுக்கு ஈந்து கொண்டான்; தன்னுடைய அத்தனை தவறுகளோடும் ஈந்து கொண்டான். அதுதான் ஸகலமும். பைத்தியம் பிடித்திருந்த இம்மாதங்களில் இருவரும் குருவருளும் மெய்யாக உள்ள யதார்த்த உண்மையாக உருக்கொண்டன. மற்ற யாவும் அற்பமாயின. பாபம் செய்திருக்கிறோமே, நமக்கு விசேஷத் தகுதி எதுவுமில்லையேயென்ற எண்ணங்கள் அவனை ஹிம்ஸித்ததேயில்லை. ஈசனை அவன் நேசித்தான். அநேக விஷயங்களில் ஒன்றாக அவனை விரும்பாமல், ஸகல விஷயங்களுக்கும் மேலாக அவனை விரும்பினான். அதுவே போதுமானதாயிருந்தது. அவனுடைய காருண்யத்தினால் அவன் அவனை ஏற்றுக் கொண்டு விட்டான். அவன் எப்படியிருக்க வேண்டுமென்று அவன் விரும்புவானோ அப்படி அவனை ப்ரேமையே மாற்றிவிடும்.

● ● ● ●

வெப்ப காலம் தொடங்கியது. எனவே, இந்திரா முஸ்ஸோரிக்குச் சென்றான். அனுபவங்கள் தொடர்ந்தன. இரவுபத்தரை மணிக்கு த்யானத்துக்கு உட்கார்ந்தவன் எழுந்திருந்தபோது ஸூர்யோதயமாகிவிட்டது. உட்கார்ந்தபடியே தூக்கத்தில் விழுகிறோம் போலிருக்கிறது என்றே முதலில் நினைத்தான். ஆனால் ஒருநாள், அவன் அமர்ந்தவுடன் முதுகெலும்பின் அடியிலிருந்து புறப்பட்டுப் பீறியேறும் மின் ஓட்டம் வழக்கம்போல அவனுடைய தலையுச்சியை அடைந்ததோடு நிற்கவில்லை. மாறாக, அது அவன் சிரஸைத் தொட்டவுடன் சிரஸ் திறந்து கொண்டது — அல்லது அப்படி அவனுக்குத் தோன்றியது. தான் தன்னுடைய சரீரத்துக்கு வெளியே இருப்பதாகக் கண்டு கொண்டான். ஆனந்தத்தின் வெல்வெட்டு அலைகளின் மேல் அவன் மிதக்கிறான்! விசாலமாகிக் கொண்டே போகிறான்! காற்றைப் போலத் தங்கு தடையின்றி சஞ்சரிக்கிறான்! எண்ணமில்லை, ஆசையில்லை, இன்பக் கிளர்ச்சியில்லை. முற்றிலும் மாறான ஏதோ ஒன்றே இருக்கிறது. இது ஏதோ புதிய ஒழுங்கெழில்; வேறேதோ லோகம். இங்கே கால, தேசத் தடுப்பான்கள் இல்லை. ஆனாலும் அவனுடைய தனி ஜீவத்வத்தை அவன் இழக்காமல் வைத்துக் கொண்டு தானிருக்கிறான். பூமியில் உட்கார்ந்த நிலையிலுள்ள அவனுடைய உடம்பை அவனால் பார்க்கவும் முடிகிறது. சிறிது காலம் சென்றது. தலையிலே கனமான ஒரு உணர்ச்சி. அவ்வளவுதான் — சரீரத்துக்குள் மீண்டும் தான் வந்து விட்டதைத் தெரிந்து கொண்

---

''எங்க ஊரை விட்டு ஒரு சேட் போனார். அதுக்குப் பதிலா வேறொரு சேட் வந்துட்டார்.''

''காம்பன் 'சேட்' ஆயிடுச்சன்னு சொல்லு.''

—வீ. ஜெயராமன்.



டான். இதுவே ஸவிகல்ப ஸமாதியில் அவனுடைய முதலனுபவம்.

அவனது உலகியல் நிலவரத்தை உச்ச கட்டத்துக்குக் கொண்டு வந்த நிகழ்ச்சியொன்று உண்டு. அன்று அவன் தனதறையில் ஆறு மணி நேரத்துக்கு மேல் த்யானத்திலிருந்ததால் ஒரு முக்கியமான பொது அலுவலை விட்டுவிட நேர்ந்தது. சம்பந்தப்பட்டவர்கள் அலறிப் புடைத்துக் கொண்டு ஃபோன் போட்டுக் கொண்டேயிருந்தும் பலனில்லை. அகத்து மனுஷ்யரொருவருக்கு ஆத்திரம் கண்டு விட்டது. நிஜமாகத்தான் த்யானத்திலிருக்கிறானா என்று ஸந்தேகித்து, எரிகிற ஒரு ஸிகரெட்டை அவன் விரலில் அழுத்தினார். விரலுக்குரிய கை ஆடத்தான் செய்ததாம். ஆனாலும் அவனது த்யானம் முறிவுபடவில்லை.

நாட்கள் செல்லச் செல்ல அவனுக்கு எக்காலமுமே ஈசன் தன்னைச் சூழ்ந்து நிற்பது தெரிந்தது. நடக்கும் போது அவன் மூச்சு இதோ தன் கன்னத்தில் படுகிறாற்போல உணர்வான்; நன்றியோடு 'இங்கே இருக்கிறான், என் பக்கத்தே நடக்கிறான்', என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொள்வான். காரியங்கள் செய்யும்போது தனக்கு அவன் ஸஹாயம் செய்வதை, வழிகள் சொல்லிக் கொடுப்பதைத் தன்னுடைய சுமையை லேசாக்குவதைக் கண்டு கொண்டான். இன்னமும் அவன் திருமுகத்தை அவன் கண்டானில்லை. ஆயினும் அவனுடைய நிழல் அவன் மீது படிந்து விட்டது. தனது ஹ்ருதயத் துடிப்புக்கு இசைவான லய கதியில் அவனுடைய பாதம் பெயர்ந்து வரும் ஒலியை அவன் கேட்டு விட்டான். அவனது கரம் அவனுடைய கரத்தின் மீது ஊன்றியிருக்கிறது. தன்னிடம் அவன் ரஹஸ்யம் பேசுவதாகச் சில சமயம் அவனுடைய எண்ணம் சொல்லும். எக்காலமும் அவன் உடனிருப்பதை உணர, அவனோடு பேச, தன்னால் முடிந்ததெல்லாம் அவனுக்கு எப்பொழுதும் செய்து கொண்டிருக்கத் தன்னை ஊக்கிப் பழக்கி வந்தான். மெய்யாலுமே அவன் எப்போதும் ப்ரஸன்னமாகத்தானிருந்தான் — அவனுக்கு உள்ளும் புறமும். ஒருபோதும் அவன் அவனைக் கைவிட்டதில்லை; இது வேண்டும், இதைச் செய் என்றெல்லாம் அவன் ஒருபோதும் நிர்ப்பந்தித்ததில்லை; பேரம் பேசியதேயில்லை. ஸாக்ஷி மாத்ரமாகவே இருந்தான் - ஆனாலும் நல்ல வழியில் சென்ற போது ஒரு ஸந்தோஷம் கண்டான்; தடுக்கிக் கொண்ட போது ம்ருதுவாகத் தூக்கி விட்டான்; விழுந்த போது வேதனைப் பட்டான்.

● ● ●

ஒரு பிற்பகல் அவன் த்யானம் செய்து கொண்டிருக்கும் போது பச்சை உடுத்திய சில பாலர்களும், பாலிகைகளும் மந்திரத்தின் மாந்தோப்பைச் சுற்றி ஆனந்தமாய் நாட்டியமாடக் கண்டான். திடீரென, புல்தரை மேல் ரத்தம் காணப்பட்டது. பாலர்களில் இருவர், ''மா, அவர்கள் எங்கள் கைகளை



''புகை பிடிப்பவர்களுக்கு மூப்பு என்பதே ஏற்படாது. ஏன் தெரியுமா? அவர்கள்தான் நடுத்தர வயதை அடையும் போதே இறந்து விடுவார்களே, அவர்களுக்கு மூப்பு எப்படி ஏற்படும்?'' — குஷ்வந்த் ஸிங் தேர்ந்தெடுத்த வாசகம் இது!

சண்டேயிலிருந்து கோபஞ்சு.

---

வெட்டுகிறார்கள்'' என்று கூவினர். இந்திரா குதித்தெழுந்து மாடியிலிருந்து கீழே ஓடினான். போகும்போதே, தான் கண்டதை தாதாவிடம் சொன்னான். ஒரேயடியாக நெகிழ்ந்து கேவியழுதபடி அவன் தோட்டத்தை அடைந்தான். அங்கே தோட்டக்காரன் மாமரத்தின் கிளைகளை வெட்டிச் சாய்த்துக் கொண்டிருந்தான். குருபாயி அவன் சொன்னதை அவனுக்குத் தெரிவிக்க மறந்து போயிருக்கிறார்.

மறுபடி மறுபடி மறந்து போவார்கள். அவனும் மீள மீள வெட்டுண்ட மரம், செடி, கொடிகளுக்காக அழ வேண்டியதாகும். இந்திரா உண்மை சொல்பவன்: நம்மைப் போலவே இன்ப துன்பங்கள் துய்க்கும் பூக்களும், செடிகளும், தங்களது சிந்தனையதிர்வால் உண்மையாகவே அவனோடு பேசின என்பதை அவர்கள் அறிவால் ஒப்புக் கொண்டார்கள். ஆயினும் அறிவுக்குத் தெரிந்ததை அவர்கள் எப்படி இதயத்தால் புரிந்து கொள்ள முடியும்?

● ● ●

1949—ஆக இருக்கலாம். முஸ்ஸோரியில் இருந்த இந்திரா தினமும் பதினாறு மணியாவது தியானத்திலிருப்பான். ஒரு பிற்பகல் த்யானம் முடிந்து எழுந்திருக்கையில் ஒரு பாட்டின் சில வரிகளைத் தான் திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருப்பதாகக் கண்டு கொண்டான்.

பம அநோகி ரீத் ப்யா ரீ பம அநோகி ரீத்...

முன்னெப்போதோ பார்த்த ஸினிமாப் படப் பாடலாயிருக்கலாமென்று முதலில் நினைத்தான். எளிய ஹிந்தியில் அமைந்த பாடல். இந்திராவின் மொழி உருது வெனினும் அவனால் அர்த்தம் புரிந்து கொள்ள முடிந்தது. பிற்பாடு தாதா அதை மொழி பெயர்த்திருக்கிறார்.

சில நாட்களுக்குப் பின் அவன் இன்னொரு பாடலின் சொற்களை மொழிந்தவாறே விழித்தெழுந்தான். இவ்வாறாக ஒரு டஜன்

பாடல்கள் அவளிடம் வந்தன. ஒன்றன் பின் ஒன்றாக. அவள் எதுவும் பார்க்கவுமில்லை, ஏதேனும் குரல் பாடிக் கேட்கவுமில்லை. ஆனால் எப்படியோ பாட்டுக்கள் மட்டும் அவள் நினைவுக்குள் வந்தன.

புதுவை சென்றாள். நம்பவொண்ணா நாடகமும் தொடங்கியது. ஒருநாள் காலை தாதா தமது ஜாகையில் பாடிக் கொண்டிருக்கையில், ராஜஸ்தானி உடையணிந்த ஓர் அழகிய மாதரசியை இந்திரா கண்டாள். திறந்த கண்களாலா, மூடிய கண்ணுக்குள்ளா என்று அவளுக்கு நிச்சயப்படுத்திச் சொல்லத் தெரியவில்லை. அந்தப் பெண்மணி ஒல்லியாக இருந்தாள். அவளது சௌரவ நளினம் சொல்லி முடியாது. அத்தனை அழகிய கண்களை இந்திரா எங்கும் கண்டதில்லை. அவள் தாதாவின் பக்கத்தில் அமர்ந்தாள். தாளம் போட்டாள்; இசையில் தன்னை மறந்தாள். அவள் ஏன் ஏனைய ஆச்ரமவாசிகளைப் போல் வெள்ளாடை உடுத்தவில்லை என்று இந்திரா ஆச்சரியப்பட்டாள். ''ஆச்ரமத்தைப் பார்க்க வந்திருப்பவள் போலிருக்கிறது; தாதாவுக்கு நெருங்கிய பழக்கமுள்ளவளாயிருக்கலாம்'' என எண்ணினாள். மற்றவர்களோடு அவளும் புறப்பட்ட போது அவளுருவத்துக்கு நிழல் விழவில்லை; அவளது பாதம் பூமியைத் தொட்டதாகத் தெரியவில்லை.

மீராவின் ஆவிர்பாவம் நம்பவொண்ணாததுதான். இது தன் தகுதியால் நடந்தது என்று ஆண்டுகள் பல ஆன பிறகும்கூட இந்திரா பெருமை கோர முடியாத அளவுக்கு அது மஹாவிந்தையாக இருந்தது. ஹிந்தியிலேயே அந்தப் பாட்டுக்கள் வந்தன. அவற்றில் சில 'வார்த்தைகள் இந்திராவுக்குத் தெரியாதவை. மீரா தன்னிடம் வார்த்தைகளால் பேசாமல் உயிரதிர்வுகளாலேயே பேசினாளென்று இந்திரா தெரிந்து கொள்ளும் வரையில் இது அவளுக்குப் புரியாத புதிராக இருந்தது. அவளது மனம் முற்றும் மௌனமாயிருந்த ஸமயங்களில் பாட்டின் வார்த்தைகள் பிழையின்றி அவளில் இறங்கின. மனத்தில் ஒரு அலை வட்டமிட்டாலும் அதிர்வுகள் அதன் ஊடே செல்கையில் ஒரு மூலவார்த்தை விலகி விழுந்துவிடும்; பதிலுக்கு அதே போன்றதொரு உருதுப் பதம் இடம்பெறும்.

ஒருநாள் இந்திரா இன்பப் பரவசத்தில் எழுதினாள்:

நினைக்கு எட்டாத நிலத்திருந்தே, மனமே!
அன்புச் சிறகினில் 'அவள்வந் தாள்!
அன்னவள் கண்ணொளிக் கதிரினிலே
இதழ்திறந் ததுஎன இதயம்.
என்னவெல் லாம் என இயல்போ
அத்தனை யும்அவள் அணைப்புள் வந்திட,
நேசத்தொ டென்கரம் நாடினனே.

## மாணவர் பக்கம்



○ ''பவானி! பவானி குட்டி! விச்சாமிருக்கியே'' என்று பவானியா நடித்த தங்கமுத்துவைப் பார்த்துத்தட்டிக் கொடுக்கிறார் மாமாவாக நடித்த சாந்தாராம்

# பரிசு ரூ 1000 நாடகப் போட்டி முடிவு

கல்கி ஆசிரியர் அவர்களுக்கு
வணக்கம்.

நாடகப் போட்டிக்கு வந்துள்ள அறிக்கைகளையும், மதிப்பீடுகளையும் பார்த்தேன். பங்கேற்ற எல்லாக் கல்லூரிகளுமே ஆர்வத்துடன் ''வாசல்'' நாடகத்தையே நடத்தியிருக்கின்றன என்பது வியப்பளிக்கிறது; நடத்துவதற்கு எளிதான நாடகம் என்பது காரணமாயிருக்கலாம். எந்தக் கல்லூரியாவது ''கிருஷ்ணா, கிருஷ்ணா'' நாடகத்தை நடத்தியிருந்தால், யோசிக்காமல் அந்தக் கல்லூரிக்கே பரிசு தருமாறு சிபாரிசு செய்வேன். ஆனால் ''வாசல்'' நாடகம் மட்டுமே மேடையேறியிருப்பதால், இம்முயற்சியின் வரம்புகள் குறுகி விட்டதுபோல் உணர்கிறேன். எனினும் இதை நடத்தியிருக்கும் கல்லூரிகளில், **விருதுநகர் ஹிந்து நாடார்களின் செந்திக் குமார நாடார் கல்லூரியின்** முயற்சியும் சாதனையும் பெரிய எடுப்பில் அமைந்திருப்பதாக எனக்குத் தோன்றுகிறது: நன்கு திட்டமிட்டுப்போதிய தன்னம்பிக்கையோடும், விளம்பரத்தோடும் இந்த நாடகத்தை நடத்தி, நூற்றுக்கணக்கான மக்களைக் கவரும் அளவுக்கு இக்கல்லூரி மாணவர்கள் திரு. பால் அசோக்கின் தலைமையில் பெருமுயற்சி செய்திருக்கிறார்கள் என்பதால் விருதுநகர் கல்லூரிக்கே பரிசளிக்க வேண்டுமென நான் சிபாரிசு செய்கிறேன். இந்தக் கல்லூரியின் மாணவர்களுக்கும், கலைஞர்களுக்கும் என் மனப்பூர்வமான வாழ்த்துக்கள்.

இதில் தீவிர உற்சாகம் காட்டிய மற்றக் கல்லூரிகளின் முயற்சியையும் சாமானியமானதாக ஒதுக்கி விட முடியாது. தங்கள் பத்திரிகையில் ஒரு பரிசுக்கே இடமிருந்தாலும், மற்ற கல்லூரிகளுக்கும் ஆறுதல் பரிசு ஏதாவது அளிக்க முடியுமானால் நல்லது.

இந்தப் புதுமை முயற்சியில், ஈடுபட்டு, மாணவர்களை ஊக்குவித்த 'கல்கி'க்கு என் அன்பு நிறைந்த வாழ்த்துக்கள்.

அன்பன்,
**பூர்ணம் விசுவநாதன்**

திரு. பூர்ணம் விசுவநாதன் அவர்களின் தீர்ப்புப்படியே விருதுநகர், ஹிந்து நாடார்களின் செந்திக்குமார நாடார் கல்லூரி முதல் பரிசான ரூ. 1000 - பெறுகிறது. இதனை நாடகக் குழுவினர் தமது முதல்வரையும் கலந்தாலோசித்துச் சிறந்த முறையில் பயன்படுத்திக் கொள்ள வேண்டுகிறோம்.

நாடகம் அரங்கேற்றிய மற்ற கல்லூரிகளுக்குப் புத்தகப் பரிசுகள் அனுப்பி வைக்கப்படுகின்றன.

1. விவேகானந்தா கல்லூரி, சென்னை–4.
2. லேடி டோக் கல்லூரி, மதுரை–2.
3. அரசினர் மகளிர் கல்லூரி, கும்பகோணம்
4. அரசினர் மகளிர் கலைக்கல்லூரி, தஞ்சை

ஆசிரியர், கல்கி



# கை கொடுக்கும் கை

அஞ்ஞாத வாசம் செய்து விட்டு வந்திருக்கும் மகேந்திரனின் படம். ரஜினி ஸ்டைலுக்குத் தகுந்தமாதிரி படம் எடுப்பதா, தன் டேஸ்ட்டுக்குத் தகுந்த மாதிரி படம் எடுப்பதா என்பது பற்றிய சின்னக் குழப்பத்தைக் கடைசிவரை தவிர்க்க முடியாமல் தவித்திருக்கிறார்.

கிராமம், நாட்டாண்மை, வீர இளைஞன், பெண்கள் பின்னால் அலையும் பண்ணை, அவருக்குக் குடை பிடிக்கும் கோமாளி என்று ஜாக்கிரதையான காம்பினேஷன். கூடவே மகேந்திரத்தனத்திற்காக ஒரு குருட்டுப் பெண்ணும் உண்டு. ரோஷக்கார அண்ணன் வி.எஸ். ராகவனும், அண்ணி சௌகார் ஜானகியும் ஒரு ஜோடி! (சௌகார் ஜானகியை அத்தனை தடவை க்ளோஸப்பில் காட்டிப் பயமுறுத்த வேண்டுமா என்பது தனி கேள்வி.)

அண்ணனுக்கு இஷ்டமில்லாமல் தான் தேர்வுசெய்த பெண்ணை மணந்துகொண்டு அவரிடமே ஆசிர்வாதத்துக்கு ரஜினி வருகிற காட்சியில் ஒரு சின்ன சிறுகதை. ரோஷம் நிராமல் அண்ணன் முகத்தைத் திருப்பிக் கொள்ள, நமஸ்காரம் செய்கிற புதுப் பெண்ணின் கழுத்தில் அண்ணி தன் சுழுத்து நகையை அணிவித்து வாழ்த்துச் சொல்ல, கழுத்தைத் திருப்பாமலேயே அண்ணன் ஆசிர்வாதம் செய்ய, கனத்த மனசோடு தம்பி வெளியேறுகிறநேரத்தில் தலையில் இடித்துக் கொண்டவுடன் அண்ணன் தன்னிச்சையாய்ப் 'பார்த்துப்பா' என்று பதறுகிற இடம் மகேந்திரத்தனம்.

அப்புறம் ரஜினியின் தினவெடுக்கும் தோளுக்காக நாலைந்து காட்சிகள், கவர்ச்சிப் பிரியர்களுக்காகச் சாராயக்கடை சரக்கு என்று நிறைய சேர்க்கை.

இடைவேளைக்கப்புறம் சதைப்பிடிப்பான கதையும் உண்டு. அப்பாவி என்று குடும்பத்தோடு சேர்த்துக் கொண்ட பின்னை, வில்லனோடு சேர்ந்து கொண்டு செய்கிற அக்கிரமங்கள் சுவையானவை. மனசில் திக்திக் என்னும் இனி விளைப்புபவை.

அடிதடிக் காட்சிகள், ஜூடோ ரத்தினம், கவனமாய் ஒரு பஜாரைத் தேர்ந்தெடுத்து ஒவ்வொன்றாய் அத்தனை கடைகளையும் நாசமாக்குகிற ஜோர் (கூடவே இன்னொரு படத்திலும் இடம் பெறுமளிருந்தால்) பாராட்டுக்குரியது.

'தாழம்பூவே வாசம் வீசு' பாடல் இனிமை. மற்றது?

மகேந்திரனுக்குக் கை கொடுக்கலாம் என்று பார்த்தால் சற்று யோசனையாய் இருக்கிறது.






கதறக் கதறப் பையனைத் தூக்கிப் போடுவதாகட்டும், ஓடுகிற தேன் பதுளையைக் கொண்டு வைக்க வைத்துத் தேன் கொட்டை கொள் முதல் பண்ணிக் கொள்கிற இடமாகட்டும், தகதக வென்று எரிகிற நெருப்பில் பையனை நடக்கச் சொல்கிற விதமாகட்டும்—அஸ்திவாரம் பலமாய்த்தான் இருக்கிறது அப்புறம்?

ஒரு மனைவி, ஒரு கணவன் அவர்களின் ஒரே பையன். இந்தக் கூட்டைப் பிய்த்துப் போடும் வில்லன். பழி வாங்கும் பையன் என்பது கதை.

அட சட். புதிதாய் ஏதாவது ஒரு கதையைச் சொல்வார்கள் என்று பார்த்தால் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபதாம் வருஷக் கதையைச் சொல்கிறார்கள்.

பழி வாங்குகிற கதையில் என்னென்ன இருக்கும்?

வில்லன் கதாநாயகனை அழிக்க ஒவ்வொரு திட்டமாய்ப் போடுவான். கதாநாயகன் அத்தனையிலிருந்தும் தப்பிப்பான்.

அப்படித்தான், அப்படியேதான்.

எனவே — வில்லனின் சிமெண்ட் ஃபாக்டரிலொகேஷனில் ஒரு சண்டை. உடம்பெல்லாம் விபூதி மாதிரி சிமெண்டை அப்பிக் கொண்டு ஒருவரை ஒருவர் தூக்கிப் போட்டுச் சண்டை. லொகேஷன் நன்றாக இருக்கிறது.

நடுரோடில் ஒரு சண்டை, கிடங்கில் ஒரு சண்டை இந்த இடத்தில் ஒரு சண்டை — அந்த இடத்தில் ஒரு சண்டை — கண்ட கண்ட இடத்தில் சண்டை— ச ண் டை ' சண்டை. ஐயையோ, சண்டை பைத்தியமே பிடித்து விடும் போல!

கவனமாய் ஒரு பஜாரைத் தேர்ந்தெடுத்து ஒவ்வொன்றாய் அத்தனை கடைகளையும் நாசமாக்குகிற ஜோர் (கூடவே இன்னொரு படத்திலும் இடம் பெறாமலிருந்தால்) பாராட்டுக்குரியது.

மேலே பாகில் மாட்டி ஊஞ்சலாடி தியாகராஜன் தப்பிக்கும் காட்சி எம்பட்டியான் ஸ்டைல். வாவ் கோழி டான்ஸ்!

செந்தாமரை வழக்கம் போல வெகு அமர்த்தலாய் நடித்திருக்கிறார். அந்தப் பாழடைந்த மண்டபத்தில் ஊர்வசியைக் கட்டிப்போட்டிருக்க, சரிதா வந்து அவரை விடுவித்து, தப்பிப் போகுமாறு சொல்ல, ஊர்வசி நானாவித வாக்கியங்களில் மறுக்க, சரிதா தனக்கு வந்த போட்டியாய் நினைத்துச் சக்களத்திச் சண்டை பாணியில் படபடக்க, நாகரீக ஊர்வசி, 'வாட் ஆர் யூ டாக்கிங்?' என்பதும் 'ஆமாண்டி.... வாட்டர் தான் என் கண்ணிலேயே இருக்கே' என்று சரிதா குமுறுகிற இடமும் ஒன்ஸ்மோர் மட்டுமல்ல, ட்வைஸ்மோர்!

எல்லாப் படங்களிலும் வில்லனை ஒரேயடியாக க்ளோஸ் பண்ணுவார்கள். இதில் தவணை முறையில்! (முதலில் ஒருகை. அப்புறம் காது. அப்புறம் ஒருகண் புதுமைதான் போங்க!

—ஜெயமன்மதன்

குவிஸ்



# பஞ்சாப் — பத்து கேள்விகள்

1. பஞ்சாப் என்றவுடன் நினைவுக்கு வரும் சுதந்திரப் போராட்ட வீரர் யார்?
   1. பகத் சிங்,
   2. பூட்டாசிங்,
   3. தாராசிங்.

2. சீக்கிய குருமார்கள் வழியில் பத்தாவது குருவின் பெயர் என்ன?
   1. குருநானக்,
   2. குருகோவிந்தசிங்,
   3. குருரஞ்சித்சிங்.

3. சீக்கியர்கள் மத ஆசாரப்படி தலைமுடியில் செருகிக் கொள்ள வேண்டியது எது?
   1. சேஃப்டிபின்,
   2. மரச்சீப்பு,
   3. இரும்புச் சீப்பு.

4. சீக்கியர்கள் பின்பற்றும் சட்ட திட்டங்கள் — சொத்துரிமை திருமணம் போன்றவை எந்த மதக்கோட்பாடுகளைச் சேர்ந்தவை?
   1. இஸ்லாம்,
   2. பாரசீகம்,
   3. இந்துமதம்.

5. சீக்கிய புனித நூல்கள் பொற்கோவிலில் எந்தப் பகுதியில் பாதுகாக்கப்படுகின்றன?
   1. ஹர்மந்திர்சாஹிப்,
   2. அகால்தகத்,
   3. தர்சனி டியோஹிரி.

6. பாகிஸ்தான் தோன்றிய காலத்தில் தனி சீக்கிஸ்தான் வேண்டும் என்று குரல் எழுப்பியவர் யார்?
   1. கர்தார்சிங்,
   2. ஜஸ்வந்த்சிங்,
   3. பிரகாஷ்சிங் பாதல்.

7. வெளிநாடுகளில் இருந்து கொண்டு காலிஸ்தான் இயக்கத்திற்காகப் பயங்கரவாதிகளுக்கு ஆதரவு தேடுபவா யார்?
   1. கங்காசிங்டில்லான்,
   2. தல்வாண்டி,
   3. சுஜீந்தர்சிங்.

8. பிந்தரன்வாலேயின் செயல்களுக்கு எதிராக எழுந்த ஸ்தாபனத்தின் பெயர் என்ன?
   1. அகாலிதளம்,
   2. நிரங்காரிகள்,
   3. பாபர்கால்சா.

9. சீக்கியரின் பொற்கோயிலுக்கு இணையாக எழுப்பப்பட்ட ஹிந்துக்களின் ஆலயத்தின் பெயர் என்ன?
   1. காளிகட்,
   2. மானசரோவர்,
   3. துர்கையாணு.

10. பஞ்சாப் பயங்கரவாதிகளின் துப்பாக்கிகளுக்குப் பலியான பிரபல பத்திரிகையாளர் பெயர் என்ன?
    1. *ஹர்பன்ஸ்லால்கன்னா,
    2. விஸ்வநாத் திவாரி,
    3. லாலாஜகத் நாராயண்.

பத்து விடைகளும் சரியாகச் சொன்னால் உம்மை பஞ்சாப் பிரச்னையில் பிரதமரின் ஆலோசகராகவே அமர்த்தலாம்! ஷொட்டு கொடுத்துக் கொள்ளவும்!

விடைகள்: 1–1; 2–2; 3–3; 4–3; 5–1; 6–1; 7–1; 8–3; 9–3; 10–3.

தொகுப்பு: பட்டினத்தார்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran




# ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஒன்றுதான், அதன் ஒப்பற்ற 3-வழிச் செயலால் வியர்க்குருவை தடுக்கிறது, முறியடிக்கிறது.

OBM-2515 TM

ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஒன்றில் தான், பிரபலம் பெற்ற மருந்துக் கலவை அடங்கியுள்ளது—அது, மூன்று தீவிரமான வழிகளில் செயல் படுகிறது.

● **தடுத்தல்**

இதன் பாக்டீரியோஸ்டாடிக் செயல், பாக்டீரியா கிருமிகள் பெருகுவதை தடுக்கிறது.

● **நிவாரணம்**

சுகந்த மணமுள்ள ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர், வியர்வையை உறிஞ்சுகிறது, இதமளித்து விரைவான நிவாரணம் தருகிறது.

● **செயல்**

ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஒப்பற்ற கோர்டோனிடிக் செயல் உள்ளது; அது, பாதிக்கப்பட்ட சருமத்தை விரைவாக மாசு மருவற்றதாக்குகிறது.






குடும்பம் முழுவதற்குமான பாதுகாப்பு

Johnson & Johnson

ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர்- வேர்க்குருவிலிருந்து உங்களுக்கு சிறந்த பாதுகாப்பு.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

